


ஆபீஸில் வேலை நடக்கிறது

ஹெர்குலஸ் சைகிள்கள் எங்கெங்கு சென்றாலும் அந்தந்த இடங்களின் சூழ்நிலைக்கு மிகவும் ஏற்றவையாகத் திகழ்கின்றது. ஒவ்வொரு தேசத்தின் விசேஷத் தேவைகளை ஹெர்குலஸ் கம்பெனி இஞ்சினியர்கள் நன்கு அறிந்திருப்பதினால்தான் இது சாத்தியமாகிறது. நூதன அமைப்பு, மிகவும் உயர் ரகப் பொருள்கள், இணையிலா வேலைப்பாடு ஆகிய குணங்களால் ஹெர்குலஸ் சைகிள்கள் உலகிலேயே மிகவும் விரும்பத்தகுந்ததாயுள்ளது.



# Hercules



## ஹெர்குலஸ்

எல்லா பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்

THE HERCULES CYCLE & MOTOR CO. LTD., BIRMINGHAM, ENGLAND.

EAS/13/99R

# நீங்கள் க்ஷவரம் செய்து கொள்ளும்போது என்னஏற்படுகிறது ?



கேரளா நுரையால் மிருதுவாக்கப் பட்டு சௌகர்யமாக்கப் பட்டதும் மயிர் எளிதில் வெட்டப்படுகிறது.

மயிர்க்கத்தியின் விளிம்பிலிருந்து இயற்கையாகவே தெறித்துப் போகிறது. ஆகையால் உங்களுக்குத் தாடிவெட்டுவதற்கு நேராக நிற்பதற்குத் தடித்த நுரை அவசியம். கேரளா ஷேவிங் சோப் நீண்டகாலம் இருக்கக் கூடியதும், மயிரைத் தடுக்கக் கூடிய நுரையை உண்டு பண்ணுவதும், ரஸாயனப் பொருள்களின் சேர்க்கையால் அது ஒவ்வொரு மயிரையும் எளிதில் வெட்டுவதற்கு மயிரை மிருதுவாகச் செய்கிறது. அது கத்தியை மெருகுபடுத்தி முகத்தையும் மிருதுவாக்குகிறது.

## உங்கள் முகத்தினிடம் தயவைக் காட்டுங்கள்




## ஷேவிங் ஸ்டிக்கை உபயோகியுங்கள்

பிளாஸ்டிக் டியூப்களில் அணா 11½.

ஸ்டிக் மட்டும் அணா 9.



**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட், கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

கல்கி

# பொருளடக்கம்

மலர் 9 இதழ் 51 | ஜூலை 23 | விக்ருதி ஆடி 8



இதில் பிரயோஜனமில்லை



வேறு சாவிகளால்
முயற்சிப்பதில்



அதனுடைய சொந்த
சாவிதான்




ஒரு கோத்ரெஜ் பூட்டை
திறக்க முடியும்

# கோத்ரெஜ்

**Godrej** ரிஜிஸ்டர்டு

ஆமைப் பூட்டுகள்

பாத்திர அலமாரிப் பூட்டுகள்

இழுவறைப் பூட்டுகள்

நைட்லாட்சு தாழ்ப்பாள்கள்

பூட்டுகள், சாவிகள் முதலியன வரிசை வரிசையாக மெஷின்களில் செய்து நூற்றுக் கணக்கான திறமை வாய்ந்த வேலையாட்களால் கோத்ரெஜ் தொழிற்சாலையிலேயே கையால் பூர்த்தியாகச் சேர்த்து அமைக்கவையாகும். இம்மாதிரி விசேஷத் தயாரிப்பு முறையைக் கையாண்டு வருவதனால் ஒரு பூட்டைப்போல் மற்றொன்றிருப்பது இல்லையாது. இந்த பிரத்யேக தயாரிப்பின் மர்மம், கோத்ரெஜ் பூட்டுகளை அதனதன் சாவிகளின்றி வேறு எவ்விதமும் திறக்க முடியாது.

விலை விவரங்கள்

1½ அங்குல பாட்லாக்கிற்கு

ரூ. 5

நைட்லாட்சு ரூ. 16-8

கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி லிட்.

பாதுகாப்புடன் உயர்ந்த உலோகங்களினால் செய்த பொருள்கள், ஹாஸ்பிட்டல் பர்னிச்சர் . . . தயாரிப்போர்

மதராஸ்: 164, பிராட்வே; பம்பாய்: லால் பாக், பரேல்; 51, சர்ச்கேட் தெரு & 299, கல்பா தேவி ரோடு; பெங்களூர்: வில்சன் & ஜெனரல் ஏஜன்ஸி, 180, சாம்ராஜ்பேட் ரோடு; கோயமுத்தூர்: வில்சன் & ஜெனரல் ஏஜன்ஸி, பெரிய கடைத் தெரு; திருச்சிராப்பள்ளி: S T Rm Ct தம்பு விலாஸ் செட்டியார், 2, சின்னக் கடைத் தெரு, பாரத் பாங்கி எதிரில். தெப்பக்குளம்; மதுரை: S. R. S. பிரதர்ஸ், மேலக் கோபுர வீதி; பெஜவாடா: P. ... செட்டி & கோ., காகிநாடா; ராஜமஹேந்திரபுரம்: S. R. P. V. செல்லப்பிள்ளை, மெயின் ரோடு; கொச்சி: K. கோபாலன், போர்ட்; திருவனந்தபுரம்: S. கோபாலன், மெயின் ரோடு; கொழும்பு: ... லிமிடெட்., த. பெ. நெ. 317.

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 9 கல்கி இதழ் 51

# என்ன சேதி?

## இஞ்ஜினீர்கள் பஞ்சம்!

சென்னை சர்க்கார் மராமத்து மந்திரி கனம் எம். பக்தவத்ஸலம், சில தினங்களுக்கு முன் கோயம்புத்தூரிலே சர்க்கார் டெக்னலஜி கல்லூரியை அதன் புதிய கட்டிடத்தில் ஆரம்பித்து வைத்தபோது சில விவரங்களை வெளியிட்டார்.

"இந்த வருஷம் இஞ்ஜினீரிங் கலாசாலைகளில் உள்ள 395 ஸீட்டுகளுக்கு 2,282 மாணவர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்தன. இவ்வாறு இஞ்ஜினீரிங் கல்வியில் மாணவர்களுக்கு ஆர்வம் இருப்பது முன்னேற்றத்துக்கு இன்றியமையாதது. இதிலிருந்து நமது மாணவர்களுக்குத் தொழிற் கல்வியில் உள்ள பற்றுதல் நன்கு தெரிகிறது. சர்க்காருக்குத் தொழில் திறமை வாய்ந்தவர்கள் ஏராளமாகத் தேவைப் படுகிறார்கள். இன்று சர்க்காருக்கு ஐந்நூறுக்கு மேற்பட்ட இஞ்ஜினீரிங் பட்டதாரிகள் இருந்தால் கூட உடனடியாக வேண்டியதுதான், சர்க்கார் எத்தனையோ அபிவிருத்தித் திட்டங்களைத் தயாரித்து வைத்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் அமுலுக்குக் கொண்டு வருவதற்குப் போதிய தொழில் திறமையுள்ளவர்கள் கிடைக்கவில்லை. அதனால் சர்க்கார் மெதுவாகவே மேற்படி திட்டங்களை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறார்கள்" என்று கனம் பக்தவத்ஸலம் கூறினார். போதிய இஞ்ஜினீர்கள் கிடைக்காததால் இறுதிப் பரீட்சை முடிவதற்கு முன்பே அநேக மாணவர்களை — அவர்கள் தேறிவிடுவார்கள் என்ற ஹேஷ்யத்தின் மீது உத்தியோகங்களில் நியமிப்பதாகவும், சர்க்காருக்கு அவ்வளவு அவசரமான தேவை இருந்து வருவதாகவும் மராமத்து மந்திரி குறிப்பிட்டார். எனவே, இதிலிருந்து போதிய இஞ்ஜினீர்கள் சர்க்காருக்குக் கிடைக்காததால் முக்கியமான ஆக்கத் திட்டங்கள் நிறைவேற முடியாமல் தேங்கிக் கிடக்கின்றன என்பது வெளியாகிறது.

## நிருவது எக்காலம்?

அதே இடத்தில் மேலும் கனம் மந்திரி பேசியபோது, இஞ்ஜினீரிங் கலாசாலைகளில் இன்னும் அதிகமாக நூறு அல்லது இரு நூறு மாணவர்களைச் சேர்த்துக் கொண்டிருந்தால் தமக்குச் சந்தோஷமாக இருக்கும் என்றும், இடம் போதாததால் அதிக மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள முடியவில்லை என்றும், சர்க்கார் இஷ்டப்பட்டால் கூட சர்வகலாசாலை இடம் போதாது என்ற காரணத்தினால் அதிகமானவர்களைச் சேர்த்துக்கொள்ள இசையாது என்றும் வருந்தினார்.

ஒரு புறம் சர்க்காருக்கு நூற்றுக் கணக்கான இஞ்ஜினீர்கள் தேவையாக இருக்கிறார்கள். மற்றொரு புறம் ஆயிரக் கணக்கான மாணவர்கள் இஞ்ஜினீரிங் கலாசாலைகளில் சேர முன் வருகிறார்கள். ஆனால் கலாசாலைகளில் இடம் இல்லாததால் அவர்களைச் சேர்க்க முடியவில்லை. இந்த நிலையில் வருஷா வருஷம் ஆயிரக் கணக்கான புதிய மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதற்கு வசதியாகப் புதிய கட்டிடங்கள் எந்தக் காலத்தில் ஏற்படப் போகின்றன? சர்க்காருக்குத் தேவையான இஞ்ஜினீர்கள் எந்தக் காலத்தில் கிடைக்கப் போகிறார்கள்? சர்க்கார் தேங்கிக்கிடக்கும் அபிவிருத்தித் திட்டங்களை எந்தக் காலத்தில் நிறைவேற்றப் போகிறார்கள்? அந்தத் திட்டங்களால் நாட்டு மக்கள் எந்தக் காலத்தில் பலன் அடையப் போகிறார்கள்?

## தவிப்புக் குறைய வழி

சர்க்காரம் இதே ரீதியில் சுற்றிக் கொண்டிருந்தால் இஞ்ஜினீர்களின் பஞ்சம் இந்த ஜன்மத்தில் தீர வழி உண்டா என்பதை சர்க்கார் ஆராய்ந்து பார்க்க வேண்டும். இஞ்ஜினீரிங் கலாசாலைகளுக்காக சர்க்கார் எத்தனையோ லட்சம் செலவு செய்கிறார்கள். கோயம்புத்தூர் 'டெக்னலஜி கலாசாலைக்கு மாத்திரம் இதுவரை ஐம்பத்து நாலு லட்சம் ரூபாய்க்கு மேல் செலவு செய்ய முற்பட்டிருக்கிறார்கள். இப்போது செலவாகும் தொகையில் இன்னும் ஒரு மடங்கு அதிக மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதற்காக சர்க்கார் ஏன் 'ஷிப்டு' முறையை அனுஷ்டிக்கக் கூடாது? குறிப்பிட்ட சிலமணி நேரம் ஒரு கோஷ்டியினருக்கும் மற்றும் சில மணி நேரம் வேறொரு கோஷ்டியினருக்கும் ஏன் கல்வி யளிக்கக்கூடாது? அவ்வாறு செய்வதால் ஒரே செலவில் இப்போதிருப்பதைக் காட்டிலும் நூறுசத விகிதம் அதிக மாணவர்களுக்கு இஞ்ஜினீரிங் கலாசாலையில் மாத்திரமல்ல, மெடிகல் கலாசாலையிலும் கல்வி அளிக்கலாம். இஞ்ஜினீர்களின் பஞ்சமும் ஓரளவு தீரும். மேற்படி கலாசாலைகளில் இடமிராமல் மாணவர்கள் தவிப்பதும், அதன் சம்பந்தமான வாதப் பிரதிவாதங்களும், அந்தகைய நிலைமைக்குச் சர்க்கார் பலவிதமான ஆட்சேப சமாதானங்களைக் கண்டு பிடிக்கும் கஷ்டமும் குறையும்.

## நேர்மாறான கூற்று

நமது மராமத்து மந்திரி போதிய இஞ்ஜினீர்கள் கிடைக்கவில்லை என்று வருந்துகிறார். ஆனால் பிரதமர் குமாரசாமி ராஜா கூறுவதோ அதற்கு நேர்மாறாக இருக்கிறது. இஞ்ஜினீரிங், மெடிகல் கலாசாலைகளில் சேர ஏராளமான மாணவர்கள் வருவதால் சர்க்கார் 'ஷிப்டு' முறையை ஏன் அனுஷ்டிக்கக் கூடாது என்று பத்திரிகைப் பிரதிநிதி கேட்டதற்குப் பிரதமர், "'ஷிப்டு' முறை வைத்து அதிக மாணவர்கள் தேறி வெளியே வந்தால் அவர்கள் எல்லோருக்கும் எங்கிருந்து வேலை கொடுப்பது?" என்று பதில் அளித்தார்.

கலாசாலைகளில் தேறும் மாணவர்கள் யாவருக்கும் வேலை கொடுப்பதாக சர்க்கார் உத்தரவாதம் அளிக்கிறார்களா? அவ்வாறு உத்தரவாதம் அளிப்பதாக இருந்தால்தான் மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளலாம் என்றால் பல கலாசாலைகளையும் மூடி விடும்படியான நிலைமை ஏற்படும். எனவே, வேலை கிடைக்காது என்பதற்காகக் கலாசாலைகளில் இடம் இல்லை என்று கூறுவதோ, ஷிப்டு முறையை அமுலுக்குக் கொண்டு வராமல் இருப்பதோ நியாயமாகாது. தற்போதைய நிலையில் ஷிப்டு முறையை அனுஷ்டித்தாலன்றி மேற்படி கலாசாலைகளில் சேர முடியாமல் தவிக்கும் மாணவர்களின் கஷ்டம் தீருவதற்கு வழியில்லை.

---

### அட்டைப்பட விளக்கம்

அவள் ஓர் அரச குமாரி. மூன்று பொருள்கள்மீது அவள் மோகங்கொண்டாள். — பேசும் பறவை, பாடும் மரம், மஞ்சள் நீர். அவற்றை அடைய ஆசைப்படுகிறாள். உடனே தன் சகோதரர்களிடம் சென்று, "அண்ணன்மார்களே, அந்த அதிசயப் பொருள்கள் இல்லாமல் நான் உயிர்வாழ முடியாது. எப்படியாவது அவற்றைக் கொண்டுவர மாட்டீர்களா?" என்று வேண்டுகிறாள். உயிருக்குயிரான தங்கள் அருமைத் தங்கையின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அவர்கள் புறப்படுகிறார்கள். ஆபத்தும் பயங்கரமும் மிக்க அந்த முயற்சியில் தோற்றுப் போய் கல்லாக மாறி விடுகிறார்கள் அவர்கள். இந்தச் செய்தியைக் கேட்டு அரசகுமாரி மனம் பதைக்கிறாள். ஆனால் அவள் சோகத்தில் ஆழ்ந்து அப்படியே உட்கார்ந்து விட வில்லை. சகோதரர்களால் சாதிக்க முடியாத அம் மாபெரும் காரியத்தைத் தானே சாதிப்பதற்காக அவள் புறப்படுகிறாள். எவ்வளவு இடையூறுகள்! என்னென்ன கஷ்டங்கள்! — எல்லாவற்றையும் சமாளித்துக் கடைசியில் தன் லட்சியத்தை அவள் அடைகிறாள்.

எத்தனை முறை படித்தாலும் அலுப்புத் தட்டாத சிரஞ்சீவி இலக்கியங்களில் அரபிக் கதைகளும் ஒன்றாகும். மனதை மயக்கித் தனி உலகத்துக்கு அழைத்துக் கொண்டுபோகும் சக்தி அதற்கு உண்டு. அத்தகைய அற்புத இலக்கியத்தில் உள்ள பல கதைகளில், இப்போது "கல்கி"யில் வெளிவரும் மூன்று சகோதரிகளும் ஒன்று. அதில் வரும் ஒரு காட்சியைத்தான் இந்த இதழ் அட்டைப் படம் சித்திரிக்கிறது

# கண்டது கனவு அல்ல!


வடக்கு கொரியர்கள் போர் முனையில்
கண்ணீர் விட்டு ஓடும்படி செய்வ
தற்காக மூட்டை மூட்டையாய்
மிளகாய்ப் பொடியைத்
தூவுகிறார்கள்!
பிரம்மாண்டமான ருஷ்ய
டாங்கிகள் வழுக்கிக் குடை
சாய்வதற்காக
வழியெல்லாம்
முட்டைகளைக்
கொட்டு
கிறார்கள்.
ராக்ஷத விமானங்கள்
கத்தரிக்காய்களையும், பூசனி
பறங்கிக்காய்களையும் வெடி
குண்டுகளாக
உபயோகிக்கின்றன!

-சாஸ்திரி


அமெரிக்கப் பீரங்கிகளுக்கு வெண்டைக்காய்
ரவைகளாக உபயோகப் படுகின்றன!


தளபதிகளுக்கு மீசையை முறுக்கிக்
கொள்வதற்காக ஏராளமான
எண்ணெய் தேவையாக இருக்கிறது.


துருப்புகள் நேருக்கு நேராக
நின்று விறகுகளால் உக்ரமாகப்
போர் செய்கிறார்கள்!


நான் கண்ட தெல்லாம் கனவு அல்ல,
உண்மைதான் என்று தோன்றுகிறது!
இல்லாவிட்டால் இந்தப் பாழாய்ப்
போன சாமான்களின் விலை ஏன்
இப்படி உயர வேண்டும்?
பொதுஜனம்
SHASTRY

# மகாயுத்தம் ஒழிக!

ருஷ்யாவின் ஆதரவு பெற்ற வடக்குக் கொரியர்கள் வெற்றிமேல் வெற்றிபெற்று வருகிறார்கள்.

அமெரிக்காவின் ஆதரவு பெற்ற தெற்குக் கொரியர்கள் ஒவ்வொரு நகர மாக இழந்து வருகிறார்கள்.

எனவே, இந்நிலையில் அமெரிக்கா அணுகுண்டுகளை உபயோகிக்க வேண் டியது அவசியம் என்று சில ஆத்திரக் காரர்கள் அபூர்வ ஆலோசனை கூற முற்பட்டிருக்கிறார்கள்!

கொரியாவில் மூண்டுள்ள யுத்தம் இப்படியே நீடித்துக் கொண்டு போகு மாயின், அது இறுதியில் நாசகரமான அணுகுண்டு யுத்தத்தில் வந்து முடிந்தாலும் முடியலாம்.

கொரியா போர்முனையில் அமெரிக்கா அணுகுண்டை உபயோகிக்குமாயின், அதற்கு ஐக்கிய நாடுகள் சபையும் பொறுப்பாளியாகும்படி நேரும் என்று நியூயார்க் செய்திகள் கூறுகின்றன.

ஏனெனில், கொரியாவில் ஆக்கிர மிப்பைக் கண்டித்த ஐ. நா. சபை, அங்கு எந்தக் கட்சியினரும் அணு குண்டை உபயோகிக்கக் கூடாது என்று தடுக்கவில்லை அல்லவா?

அணுகுண்டைப் போன்ற சர்வ நாசத்தை விளைவிக்கும் கொடிய ஆயு தங்கள் சம்பந்தமாக ஐ. நா. சபை யின் தீர்மானத்தில் எதுவும் குறிப்பிட வில்லை என்று மேற்படி சபையிலுள்ள இந்தியப் பிரதிநிதி கவலைப்படுகிறார்.

கொரியா யுத்தம் அணுகுண்டு யுத்த மாக மாறிவிடலாம் என்ற பீதி நாளுக்கு நாள் அதிகமாகி வருவதால், ட்ருமனும் ஸ்டாலினும் சந்தித்துப் பேசுவதற்குப் பண்டித ஜவாஹர்லால் நேரு முயற்சி செய்ய வேண்டும் என்றும், போர் நின்று சமாதானம் ஏற்படும்படி செய்வதற்கு ஐ. நா. சபையைக் காட்டிலும் பண்டித ஜவா ஹர்லால் நேருதான் தகுதியானவர் என்றும் அமெரிக்க அணுகுண்டு விஞ் ஞானி டாக்டர் லியோ ஸில்லார்ட் வற்புறுத்தி யிருக்கிறார்.

அவசியம் நேர்ந்தால் அமெரிக்கா மறுபடியும் அணுகுண்டைப் பிரயோ கிக்கத் தயங்காது என்று சில தினங் களுக்கு முன் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் கூறியதையும் கொரியா போரின் தற்போதைய போக்கையும் கவனிக்கும்போது, அணுகுண்டு யுத் தம் ஏற்படாது என்று யாரும் உறுதி யாகச் சொல்வதற்கில்லை.

சென்ற மகா யுத்தத்தினால் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களிலிருந்து இன்னும் உலக நாடுகள் உய்யவில்லை.

இந்த நிலையில் மற்றொரு பெரிய யுத்தம் நேர்ந்தால் உலகத்தின் கதி என்ன ஆவது?

அதிலும் அந்த யுத்தம் அணுகுண்டு யுத்தமாக இருக்குமாயின் அதன் கோர விளைவு என்ன ஆகும் என்ப தைக் கற்பனை செய்து கொள்ளுவதும் பயங்கரமான விஷயம்.

• • •

சிறிய நாடுகளிடையே போர் நேர்ந் தால் அதை வல்லரசுகளோ அல்லது ஐக்கிய நாடுகள் சபையோ சமரச மாகத் தீர்த்து வைக்கலாம்.

ஆனால் உலக நாடுகளையும் ஐ. நா. சபையையும் கூட ஆட்டிவைக்கும் வல்லமையுள்ள, ராக்ஷச பலம் பொருந் திய இரண்டு மாபெரும் வல்லரசுகள் மோதிக் கொண்டால் அவைகளுக்குள் சமரசம் செய்துவைக்கும் செல்வாக் கும் தைரியமும் யாருக்கு உண்டு?

உலகத்திலே பாரத நாட்டைத் தவிர வேறு எந்த தேசத்துக்கும் அத்தகைய செல்வாக்கு இல்லை என்பது சமீப காலமாக நிகழ்ந்துவரும் சம்பவங் களிலிருந்து வெளியாகி யிருக்கிறது.

பொருளாதாரத் துறையில் இந்தி யாவைக் காட்டிலும் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் உலகில் எத் தனையோ இருக்கின்றன.

தளவாடங்களிலும் இராணுவ பலத்திலும் இந்தியாவை மிஞ்சிய நாடுகள் எத்தனையோ இருக்கின்றன.

ஆனால், பொருளாதார பலத்தையும் இராணுவ பலத்தையும் காட்டிலும் மகோன்னதமான ஆத்ம சக்தியில் இந்தியா இணையற்று விளங்குவதால், நம் நாடு இன்று வல்லரசுகளுக்குள் ஏற்பட்டுள்ள கோரமான போரைத் தீர்த்துச் சமரசம் செய்து வைக்கக் கூடிய நிலையில் இருக்கிறது.

உலகத்திலே எந்த நாடும் ஆயுதப் புரட்சியினால்தான் சுதந்திரத்தைப் பெற்றதேயன்றி, பாரத நாட்டைப் போல் காந்திஜி காட்டிய வழியைப் பின்பற்றி அன்பினால், ஆயுதமின்றி ஆத்ம பலத்தினால் சுதந்திரம் பெற்ற தேசம் எதுவுமே இல்லை.

அந்தப் புதுமையைக் கண்டு உலகமே அதிசயித்தது. அதன் பயனாக உலக நாடுகளிடையே பாரத தேசத்தின் மதிப்பு உயர்ந்தது.

* * *

உலக அரசியலிலும் இந்தியா நெறிதவறாமல் நடந்து கொண்டு வருவதால் அதற்குச் சர்வதேச மேடையில் மதிப்பு அதிகமாகியிருக்கிறது.

ஏற்கெனவே ஐ. நா. சபையில் பல்வேறு நாடுகளின் பிரச்னைகள் விவாதத்துக்கு வந்தபோது, இந்தியா நவீன ராஜ தந்திர முறையைப் பின்பற்றி அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகளின் பக்கம் சாய்ந்து கொடுக்காமல் இருப்பது தவறு என்று எத்தனையோ பேர் உபதேசம் செய்தனர்.

மேற்படி சபையிலே இதுவரையில் ஆலோசனைக்கு வந்த எந்த விஷயத்தையும் குறித்து அதன் தாரதரத்தை அடிப்படையாகக் கொண்டு இந்தியா தனது நிலையை நிர்ணயித்துக்கொண்டிருக்கிறதே யன்றி, அதை விட்டு விட்டு எந்த வல்லரசு எந்தக் கட்சியில் சாய்கிறது என்பதை முக்கியமாகக் கொண்டு தனது கொள்கையை வகுத்துக் கொள்ளவில்லை.

உதாரணமாக, பாலஸ்தீன் பிரச்னையை யொட்டி அந்தச் சபையில் இந்தியா நிர்ப்பயமாக அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் விரோதமாகவே வோட்டுக் கொடுத்தது.

அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகளின் தயவை லட்சியம் செய்யாமல் தென்னாப்பிரிக்காவின் நிற வெறியையும், தென் மேற்கு ஆப்பிரிக்காவில் அதன் ஆக்கிரமிப்பையும் கண்டித்து நீதி கிடைப்பதற்கு முயற்சித்த பெருமை பாரத நாட்டுக்கே உரியது.

இந்தோனேஷ்யப் பிரச்னையில் இந்தியா வல்லரசுகளை லட்சியம் செய்யாமல் நடந்து கொண்டு வெற்றி பெற்றது உலகம் அறிந்த விஷயம்.

சீனக் குடியரசு விஷயத்தில் அமெரிக்காவுக்கு நேர் விரோதமாக இந்தியா நடந்து கொண்டதுடன், மேற்படி சர்க்காரை பிரிட்டன் அங்கீகரிக்கும்படி செய்வதிலும் வெற்றி பெற்றதை யாரும் மறக்க முடியாது.

இந்த உலகத்தில் அணுகுண்டு உற்பத்தியையும் பிரயோகத்தையும் அறவே ஒழித்து விடுவதற்காக அந்தச் சபையிலே பாரத நாட்டுப் பிரதிநிதிகள் செய்த பெரு முயற்சி இதுவரையில் வெற்றிபெறவில்லையெனில், அதற்குக் காரணம் வல்லரசுகளே யன்றி வேறு யாரும் இல்லை.

ஐ. நா. சபை வல்லரசுகளின் சூழ்ச்சியில் கட்டுண்டு சிற்சில விஷயங்களில் நீதி தவறி நடந்து கொண்டாலும், அதை இந்தியா எடுத்துக் காட்டத் தயங்கியதில்லை.

மற்றும் உலகப் பிரச்னைகளையும் நெருக்கடியையும் தீர்க்கவல்ல ஸ்தாபனம் அந்தச் சபைதான் என்றும், எனவே அதைப் பலப்படுத்த வேண்டியது உலக நாடுகளின் கடமை என்றும் அறிவுறுத்தி. அந்தச் சபையினிடம் அகில உலகத்துக்கும் நம்பிக்கை ஏற்படும்படி செய்து வருவதும் இந்தியாவும், பண்டித ஜவாஹர்லால் நேருவும்தான் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வார்கள்.

நியாயத்தை எடுத்துக் காட்டவும், ஆக்கிரமிப்பைக் கண்டிக்கவும், ஆக்கிரமிப்புக்கு இலக்கான நாடுகளுக்கு ஆத்மார்த்த ஆதரவு அளிக்கவும் தயங்காமல் இந்தியா தன் கடமையைச் செய்து வந்திருப்பதன் மூலம் அமெரிக்கா, ருஷ்யா முதலிய வல்லரசுகளிடையே, உலக நாடுகளிடையே நமது நாட்டின் மதிப்பும் மாண்பும் பன்மடங்கு உயர்ந்திருக்கின்றன.

* * *

பாரத நாடு காந்திஜியின் வழியைப் பின்பற்றி சுதந்திரம் பெற்றதைப் போல மறுபடியும் அதே வழியைப் பின்பற்றிப் பாகிஸ்தானுடன் சமரசம் செய்து கொண்டதன் மூலம், எத்தகைய சிக்கலான பிரச்னைகளையும் சமரசமாகத் தீர்த்துக் கொள்ளலாம் என்ற உயர்ந்த கொள்கையை உலகத்துக்கு அனுஷ்டான பூர்வமாகக் காட்டியது.

அவ்வாறு உலக நாடுகளிடையே, ஐ. நா. சபையிலே மதிப்பும் செல்வாக்கும் பெற்று விளங்கும் இந்தியா இப்போது அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் சமரசம் செய்து வைக்க முற்பட்டிருப்பது முற்றிலும் பொருத்தமான காரியம் அல்லவா?

சமாதான மூர்த்தி காந்தி மகானுக்கு அடுத்தபடியாக உலகத்தின் நன்மதிப்பைப் பெற்றவரும், சர்வதேசத் தலைவர்களில் ஒருவரும், பாரத நாட்டின் பிரதம மந்திரியுமான பண்டித ஜவாஹர்லால் நேரு கொரியா யுத்தம் உலக மகா யுத்தமாகி விடாமல் தடுக்கும் திருப்பணியில் ஈடுபட்டிருப்பதை உலக மக்கள் யாவரும் பாராட்டுவார்கள்.

இன்று உலக மகா யுத்தத்தைத் தடுக்கும் வல்லமை மாபெரும் வல்லரசுகளின் தலைவர்களான ட்ருமனுக்கும் மார்ஷல் ஸ்டாலினுக்கும்தான் உண்டு.

எனவே, உலகத்தின் அமைதியையும் உலக ஜனங்களின் க்ஷேமத்தையும் முன்னிட்டு அந்த இரு தலைவர்களும் சமரசம் செய்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டு ஜவாஹர்லால்ஜி எழுதிய கடிதங்களுக்கு அவர்கள் தாமதமின்றிப் பதில் அளித்திருக்கிறார்கள்.

ஜவாஹர்லால்ஜியின் புனித முயற்சியை அந்தத் தலைவர்கள் பாராட்டி வரவேற்றிருக்கிறார்கள்.

எனினும், உலக யுத்தமா அல்லது சமாதானமா என்ற மகத்தான பிரச்னையைத் தீர்க்க வேண்டிய விஷயத்தில் வீண் கௌரவமும் பெருமையும் வந்து குறுக்கிடக் கூடாது என்றும், எப்படியாவது நெருக்கடி தீரவேண்டும் என்ற உறுதியுடன் சமரசத்துக்கு முன்வர வேண்டும் என்றும் ஜவாஹர்லால்ஜி கேட்டுக் கொண்டிருப்பதற்கு ட்ருமனும் மார்ஷல் ஸ்டாலினும் செவி சாய்ப்பார்களா என்பது இனிமேல் தான் தெரிய வேண்டும்.

பண்டித ஜவாஹர்லால் நேரு குறிப்பிட்டிருப்பதைப்போல, இந்தியாவின் முயற்சி வெற்றி பெற்றால் எல்லோருக்கும் க்ஷேமம்; இல்லாவிட்டால் உலக நெருக்கடி ஏற்பட்டபோது இந்தியா தன்னுடைய மகத்தான கடமையைச் செய்யத் தவறவில்லை என்று திருப்தியடையலாம்.

எப்படியாயினும் அணுகுண்டு யுத்தத்திலிருந்து மனித வர்க்கத்தைக் காப்பாற்றுவதற்காக ஜவாஹர்லால்ஜி மேற்கொண்டுள்ள நன்முயற்சியை உலக ஜனங்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள் என்பதிலும் உலக சரித்திரம் என்றென்றும் புகழும் என்பதிலும் சந்தேகமில்லை.





சுலோசனாதேவி - ஞானானந்தம் ★ சுசீலாதேவி - T. P. தியாகராஜன்

பாகூர் மிராசுதாரர் திரு. கிருஷ்ணமூர்த்தி படையாட்சி குமாரத்தி சௌபாக்கியவதி சுலோசனாதேவிக்கும் பதங்கிப்பேட்டை திரு. ராமானந்த ராயர் குமாரர் சிரஞ்சீவி ஞானானந்தத்திற்கும், மேற்படி கிருஷ்ணமூர்த்தி படையாட்சி குமாரத்தி சௌ. சுசீலாதேவிக்கும் மதராஸ் P. W. D இஞ்சினீயரிங் காண்ட்ராக்டர் T. முருகேச நாயக்கர் குமாரர் சிரஞ்சீவி T. P. தியாகராஜனுக்கும் 6—7—50ல் திருமணங்கள் சிறப்பாக நடைபெற்றன. திருமணத் தம்பதிகளுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்தன. அன்று மாலை ஸ்ரீ V. V. சடகோபன் அவர்களது பார்ட்டியின் சங்கீதக் கச்சேரியுடன் திருமண வைபவம் இனிது முடிந்தது.

1875

தி கடாவ் மில்ஸ்

75

வருஷங்களாக

ஒரே அதிகாரத்

தின் கீழ்

1950



கடாவ்

அழகு குணம் வாய்ந்த

வாயில்கள்



தி கடாவ் மில்ஸ், பைகுலா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். ஜவுளிக்கடை: மூல்ஜீ ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக், பம்பாய் 2.

SISTA'S-KM (S)-18-TAMIL

# தேர்தல் பயிற்சி!


தேர்தல்கள் நெருங்கிக் கொண்டிருப்பதை முன்னிட்டு ஒவ்வொரு கட்சியினரும் ஒவ்வொரு பயிற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.
– காங்கிரஸ் ஒரு காலத்தில் இரண்டு படகுகளை விடுவதற்குப் பயிற்சி பெற்று வருகிறது.
ஜனங்கள்
சர்க்கார்


சோஷலிஸ்டுக் கட்சி தூக்க முடியாத பாரத்தைத் தூக்கப் பார்க்கிறது.


ஹிந்து மகாசபை சிரசாஸனம் செய்கிறது.


கம்யூனிஸ்டுகள் தங்களுக்குள்ளேயே குஸ்தி போட்டு வருகிறார்கள்.


இவர்கள் எல்லோரிடமிருந்தும் தப்புவதற்கு வாக்காளர் ஓட்டப் பயிற்சியில் நாட்டம் கொண்டிருக்கிறார்.


இத்தனை பேருடைய தாக்குதல்களையும் சமாளிப்பது எப்படி என்று வோட்டுப் பெட்டி கதி கலங்குகிறது!




● ● ● சேலம் ஜில்லாவில் பொய் மான் கரடுக்குச் சமீபத்தில் செங்கோடக் கவுண்டன் என்னும் துடியான வாலிபன் தன்னுடைய சொந்தப் பத்து ஏக்கரா நிலத்தில் பாடுபட்டு வெள்ளாமை செய்து ஏகாங்கியாக வாழ்ந்து வந்தான். பக்கத்துக் கிராமத்தில் வசித்த பெரிய கவுண்டரின் மகள் செம்பவள வல்லியைத் திருமணம் செய்துகொள்ள எண்ணியிருந்தான். இச்சமயத்தில் ஒரு கூடார சினிமாவின் மூலமாகப் பட்டணத்து ஆட்கள் இருவர், - பெண் ஒருத்தி, - இவர்களுடன் அவனுக்குப் பழக்கம் ஏற்பட்டது. அவனுடைய அறிவை மூடிக்கொண்டு வந்த இந்தப் புது சிநேகத்தைச் செங்கோடன் உதறித் தள்ளத் தீர்மானித்துச் செம்பாவுடன் கலியாணத்தைப் பற்றியும் பேசி முடிவு செய்தான். அந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு போலீஸ்காரர் அவனுடைய வாழ்க்கையில் தலையிட்டார்! அதன் பயனாக........ ● ● ●

## 10

செம்பா மிகவும் கெட்டிக்காரப் பெண். அந்த நிலைமையில் என்ன செய்ய வேண்டும் என்பதை உடனே முடிவு செய்து கொண்டாள். வட கொரியர்களின் அறுபது டன் டாங்கிகளைக் கண்டு அமெரிக்கர்கள் செய்த காரியத்தையே அவளும் செய்யத் தீர்மானித்தாள். இச்சமயம் அவசரமாகப் பின்வாங்குவதுதான் முறை; வேறு வழியில்லை. செங்கோடன் காதில் "ஜாக்கிரதை! நான் சொன்னதையெல்லாம் நினைவு வைத்துக்கொள்!......" என்று சொல்லிவிட்டுப் பின்புறம் திரும்பிச் சென்று வைக்கோற் கட்டின் பின்னால் மறைந்தாள்.

வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்த போலீஸ்காரனுடைய கவனத்தை நாயின் குரைப்புச் சத்தம் செங்கோடன் நின்ற பக்கம் திருப்பியது. சற்று தூரத்துக்கு அப்பால் ஒரு பெண் உருவத்தின் நிழல் ஒரு கணம் தெரிந்து உடனே மறைந்தது.

போலீஸ்காரன் தலைப் பாகையைக் கையில் எடுத்துத் தலையைச் சொறிந்து கொண்டான். தொண்டையை ஒரு தடவை பலமாகக் கனைத்தான். "சீ! ராஸ்கல்! சும்மா இரு! உன் நாய்க் குணத்தைக் காட்டுகிறாயா? திருடனைக் கண்டால் பயந்து ஓடுவாய்! நம்ம ராஜா செங்கோடக் கவுண்டரைப் பார்த்து விட்டுக் குரைக்கிறாயே?" என்றான். நாயும் அவன் சொன்னதைத் தெரிந்துகொண்டதுபோல் குரைப்பை நிறுத்தியது. போலீஸ்காரன் செங்கோடனை நெருங்கிக் கொண்டே, "நம்முடைய போலீஸ் டிபார்ட்மெண்டிலும் நீ செய்கிற மாதிரிதான் வேலை செய்கிறார்கள். உன்னை டிபுடியாகவோ டி. எஸ். பி. யாகவோ போட வேண்டும்!" என்று முணுமுணுத்தான். தன்னுடைய சாமர்த்தியத்தைப் போலீஸ் இலாக்கா சரியாகத் தெரிந்து கொண்டு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்ற குறை அவனுடைய மனதில் நீண்ட காலமாகக் குடிகொண்டிருந்தது.

செங்கோடன் தான் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

போலீஸ்காரன் அவன் அருகில் வந்ததும், "யார் அது? செங்கோடக் கவுண்டன் போலிருக்கிறதே!" என்றான்.

சில நாளாகவே செங்கோடனுக்குப் பழைய சங்கோசம், பயம் எல்லாம் நீங்கிப் புதிய தைரியம் பிறந்திருந்தது.

"உங்களைப் பார்த்தால் போலீஸ்காரர் போலிருக்கிறதே!" என்றான்.

"அடே அப்பா! கெட்டிக்காரனயிருக்கிறாயே? நான் போலீஸ்காரன் என்று எப்படிக் கண்டு பிடித்தாய்?"

"அது என்ன கஷ்டம்? உங்கள் உடுப்பைப் பார்த்தால் தெரிந்து போகிறது!"

"உடுப்பைப் பார்த்து நம்பிவிடக் கூடாது, அப்பனே! இந்தக் காலத்தில் திருடன் கூடப் போலீஸ்காரன் உடுப்பைப் போட்டுக்கொண்டு வந்து விடுகிறான்!"

"திருடனா? திருடன் இங்கு எதற்காக வருகிறான்?"

"ஏதாவது அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு போகிறதற்குத்தான்!"

"இங்கே சுருட்டுகிறதற்கு ஒன்றுமில்லையே! கிழிந்த கோரைப் பாய் ஒன்றுதான் இருக்கிறது!"

"என்ன தம்பி, இப்படி ஒரே புளுகாய்ப் புளுகுகிறாய்? நீ நிறையப் பணம் சேர்த்து எங்கேயோ புதைத்து வைத்திருக்கிறாய் என்று ஊரெல்லாம் சொல்லுகிறார்களே?"

செங்கோடன் திடுக்கிட்டுப் போனான். இதேமாதிரி வேறு யாரோ தன்னைக் கேட்டார்களே, சமீபத்தில்? யார் கேட்டார்கள்? அதற்குத் தான் சொன்ன பதில் என்ன?—இதை நினைத்து நினைத்துப் பார்த்து ஞாபகப் படுத்திக்கொள்ள முயன்றான். ஆனால் ஞாபகத்துக்கு வரவில்லை.

"என்ன கவுண்டரே! ஏன் விழித்துக்கொண்டு நிற்கிறீர்? ஊரார் சொல்லுவது உண்மைதான் போலிருக்கிறது. எத்தனை ரூபாய் புதைத்து வைத்திருக்கிறீர்?"

"அதெல்லாம் சுத்தப் பொய்! ஊராருக்கு என்ன? வாயில் வந்ததைச் சொல்லுவார்கள். ஏழைக் குடியானவனிடம் அவ்வளவு ரூபாய் ஏது, புதைத்து வைப்பதற்கு? யாரோ கதை கட்டிவிட்டிருக்கிறார்கள்!"

இப்படி செங்கோடன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவனுடைய மனதிற்குள் 'இந்தப் போலீஸ்காரருடன் வந்திருக்கும் நாயைப்போல் ஒரு நல்ல சாதி நாய் வளர்க்க வேண்டும்' என்ற எண்ணம் உதயமாயிற்று.

"அது கிடக்கட்டும், தம்பி! ஊரார் என்ன சொன்னால் எனக்கு என்ன? அப்படியே உன்னிடம் நிறையப் பணம் இருந்தால் எனக்கு ஒரு தம்பிடி கொடுக்கப் போகிறாயா?" என்றான் போலீஸ்காரன்.

"அப்படிச் சொல்லாதீங்க, ஐயா! என்னிடம் பணம் இருந்தால், ஒரு தம்பிடி என்ன?—இரண்டு தம்பிடி கூடக் கொடுப்பேன். கையில் இல்லாத தோஷந்தான்!"

"கையிலே இல்லை; பூமியிலே இருக்கிறது! அப்படித்தானே?"

"இது என்னடா வம்பு? நான் பணம் புதைத்து வைக்கவில்லை என்று சத்தியம் செய்தால் கூட நம்ப மாட்டீங்க போலிருக்கே?"

"அதைச் சொல்லவில்லை, அப்பா! நீ பயிர் செய்கிறாயே? இந்த வளமான பூமியிலே பாடுபட்டால் பணம் இருக்கிறது என்று சொன்னேன்......"

"அப்படிச் சொன்னீர்களா? அது கொஞ்சம் நிஜந்தான். ஆனால் இந்தப் பூமியிலிருந்து பணத்தை எடுப்பதற்குள்ளே வாய்ப் பிராணன் தலைக்கு வந்துவிடுகிறது. சுத்த வறண்ட பூமி!"

"என்ன அப்படிச் சொல்லுகிறாய்? உன் காட்டில் சோளப் பயிர் கரு கரு வென்று வளர்ந்திருக்கிறதே! ஆறு அடி உயர ஆள் புகுந்தால்கூடத் தெரியாது! அவ்வளவு உயரம்......!"

"ஐயோ! சாமி! கண்ணைப் போடுறீங்களே?"

"கண்ணைப் போடவில்லை! ஆனால் இந்த மூக்கை ஊரிலேயே வைத்து விட்டு வந்திருக்கவேணும்! வெங்காயக் குழம்பின் வாசனை ஜம் என்று வருகிறது!" என்று சொல்லிவிட்டுப் போலீஸ்காரன் இரண்டு மூன்று தடவை பலமாக மூச்சை இழுத்து வாசனை பிடித்தான்.

"இருந்து சாப்பிட்டுவிட்டுப் போங்களேன்?" என்றான் செங்கோடன்.

"இன்றைக்கு எனக்கு வேறு இடத்தில் சாப்பாடு. குடிசைக்குள்ளே

வேறு யாராவது உண்டா? நீதான் சமைத்துக் கொள்கிறாயா?"

'என்னைத் தவிர இங்கே வேறு யாரும் இல்லை. நான் ஏகாங்கி!"

"அப்படி யிருக்கக்கூடாது. சீக்கிரத்தில் யாராவது ஒரு பெண்ணைக் கட்டிப் போடவேண்டும். நான் வரும்போது இங்கே உன்னோடு நின்று யாரோ பேசிக் கொண்டிருக்கவில்லை? அவசரமாய்ச் சோளக் கொல்லையில் புகுந்து போகவில்லை?"

"என்னங்க, கதையா யிருக்கிறது? இங்கே ஒருத்தரும் இல்லையே?"

"யாரோ சேலை கட்டிய பெண் பிள்ளை மாதிரி தோன்றியதே?"

"உங்களுக்கு ஏதோ சித்தப் பிரமை. இங்கே பெண்பிள்ளை யாரும் இல்லை."

"ஆமாம்; இருந்தாலும் இருக்கலாம். கொஞ்ச நாளாக எனக்கு எங்கே பார்த்தாலும் செம்பவளவல்லி நிற்கிறதாகவே பிரமை உண்டாகிறது. கொப்பனும்பட்டி சிவராமக் கவுண்டர் மகள் செம்பா இல்லை? அவளை நான் கலியாணம் கட்டிக் கொள்ளப் போகிறேன். அப்புறம் பார்! 374-ம் நம்பர் கான்ஸ்டேபிள் கால்மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்து அதிகாரம் பண்ணிச் சாப்பிட மாட்டாரா?"

அந்தப் போலீஸ்காரனை அங்கேயே கழுத்தை முறித்துக் கொன்றுபோட்டு விடலாமா என்று செங்கோடனுக்கு ஆத்திரம் வந்தது. செம்பாவின் மனதை அவன் நன்றாய் அறிந்து கொண்டிருந்த படியால் பொறுமையைக் கடைப்பிடித்தான்.

"அதெல்லாம் இருக்கட்டும், போலீஸ் ஐயா! எதற்காக இவ்வளவு தூரம் மெனக்கட்டு இங்கே வந்தீங்க? அதைச் சொல்லுங்க!" என்றான்.

"அடாடா! மறந்தே போய்விட்டேனே? உன்னோடு பேசுகிற சுவாரஸ்யத்திலே வந்த காரியம் மறந்து விட்டது" என்று சொல்லிவிட்டுச் சட்டைப் பையிலிருந்து எடுத்த தபாலைக் கொடுத்தான்.

"இது ஏது தபால்? எனக்கு யார் தபால் போட்டிருப்பார்கள்? அதிசயமாயிருக்கிறதே?" என்றான் செங்கோடன்.

"கூடார சினிமாவிலே உன் கன்னத்திலே அறைந்தாளே, ஒரு பெண் பிள்ளை,—குமாரி பங்கஜா, — அவள் கொடுத்தாள். சாலையில் பொய்மான் கரடு சமீபமாய் நின்றாள். நான் கொப்பனும்பட்டி போகிறேன் என்றேன். 'இதை ராஜா செங்கோடக் கவுண்டரிடம் கொடுத்து விட்டுப் போங்கள்' என்றாள். பாவம்! ஒரு பெண்பிள்ளை கெஞ்சிக் கேட்டுக் கொள்ளும்போது மாட்டேன் என்று எப்படிச் சொல்கிறது? 'சரி' என்று வாங்கிக் கொண்டு வந்தேன். நான் போகட்டுமா?"

"கொஞ்சம் இருங்க! இந்தக் கடுதாசை வாசித்துக் காட்டி விட்டுப் போங்க!"

"என்ன தம்பி, உனக்குப் படிக்கத் தெரியாதா?"

"தெரியாமல் என்ன? மூன்றும் வகுப்புவரை படித்திருக்கிறேன். அச்சு எழுத்துப் படிக்கத் தெரியும். கூட்டு எழுத்தாயிருந்தால் படிக்கிறது சிரமம். ஒருவேளை அந்த அம்மா இங்கிலீஷிலே எழுதியிருந்தாலும் எழுதியிருப்பாங்க. எனக்கு இங்கிலீஸ் தெரியாது!"

இப்படிச் சொல்லிக் கொண்டே செங்கோடன் குடிசையருகில் சென்று வாசற்படிக்குப் பக்கத்தில் வைத்திருந்த ஹரிகன் லாந்தரை எடுத்துப் பெரிதாகத் தூண்டி விட்டுக் கடிதத்தை வாசித்தான். எழுத்து புரியும் படியாகவே எழுதியிருந்தது. ஆகையால் எழுத்துக் கூட்டி இரைந்து வாசித்தான்.

"என் இருதயத்தைக் கொள்ளை கொண்ட ராஜா செங்கோடக் கவுண்டர் அவர்களுக்கு,

நான் பெரிய சங்கடத்திலும் அபாயத்திலும் சிக்கிக்கொண்டிருக்கிறேன். நாளை சாயங்காலம் கட்டாயம் வந்து என்னைச் சந்திக்கவும். நீங்கள் நாளை சாயங்காலம் வரத் தவறினால் அப்புறம் என்னை உயிரோடு காண முடியாது.

இப்படிக்கு
குமாரி பங்கஜா."

இதைப் படித்தபோது செங்கோடனுக்கு வியர்த்து விருவிருத்து விட்டது. படித்து முடித்துவிட்டுப் போலீஸ்காரனுடைய முகத்தைப் பார்த்தான். போலீஸ்காரன் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே "பார்த்தாயா? அதிர்ஷ்



டம் உன்னைத் தேடிக்கொண்டு வரு கிறது!'' என்றான்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. இதில் என்ன எழுதியிருக்கிறது? நீங்க ஒரு தடவை படித்துக் காட்டுங்க!''

"விளங்காமல் என்ன இருக்கிறது? அதுதான் வெட்ட வெளிச்சமாய் எழுதியிருக்கிறதே!'' என்று சொல்லி விட்டுப் போலீஸ்காரன் ஒரு தடவை படித்துக் காட்டினான்.

"நீங்களே ஒரு யோசனை சொல் லுங்க. இது நிஜமாயிருக்குமா? நான் போக வேணுமா?''

"போய்த்தான் பாரேன்! என்ன நடக்கிறது என்று? உன்னைக் கடித்தா விழுங்கி விடப் போகிறான்?''

"சரி, உங்கள் யோசனைப்படியே செய்கிறேன். ஆனால் உங்களை ஒன்று கேட்டுக் கொள்கிறேன்.''

"என்னை நீ இரண்டு வேண்டு மானாலும் கேட்கலாம்.''

"ஒன்றுதான்; அதற்கு மேலே இல்லை. இராத்திரி கொப்பணம் பட்டி கவுண்டர் வீட்டில் சாப்பிடப் போறீங்க அல்லவா? அங்கே என்னையும் இந்தக் குமாரி பங்கஜா வையும் பற்றி ஏதாவது கன்னாபின்னா வென்று பேசி வைக்காதீங்க! பேசி னால் காரியம் கெட்டுப் போய்விடும்.''

"அது என்ன? அப்படி என்ன காரியம் கெட்டுப் போய்விடும்?''

"உங்களிடம் சொல்லுகிறதற்கு என்ன? அந்த வீட்டுப் பெண் செம் பாவை நான்தான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன்!......''

"என்ன? என்ன? ஒரே போடாய்ப் போடுகிறாயே?''

"நான் போட்டால் ஒரே போடாய்த் தான் போடுகிறது; இரண்டு மூன்று போடுகிறதில்லை. செம்பாவுக்கும் எனக்கும் குறுக்கே யார் வந்தாலும், அவன் தசகண்ட இராவணனாயிருந் தாலும் சரி, ஒன்று அவன் சாக வேணும்; அல்லது என் உயிர் போக வேணும். நான் சொல்ல வேண்டி யதை யெல்லாம் சொல்லி விட்டேன். அப்புறம் உங்கள் இஷ்டம்!''

"என் இஷ்டமும் இல்லே; உன் இஷ்டமும் இல்லே! அந்தப் பெண் இஷ்டப்பட்டு யாரை......"

"அதைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம்! செம்பாவுக்கு என்னைக் கட்டிக் கொள்ளத்தான் இஷ்டம். நீங்களே கேட்டுக் கொள்ளலாம்!"

"கவுண்டரே! இதை முன்னமே சொல்லித் தொலைக்கிறதுதானே? சொல்லி யிருந்தால் நான் அந்தப் பெண் பேச்சையை எடுத்திருக்க மாட்டேனே? செம்பாவின் தகப்பனுர் சொன்னுர், மகளுக்கு இந்த வருஷம் அவசியம் கலியாணம் செய்துவிட வேண்டும் என்று. உனக்கு அவளைக் கட்டிக் கொள்ள இஷ்டம் இல்லே யென்றும் தெரிவித்தார். நீயே கலியாணம் செய்து கொள்கிறதா யிருந்தால் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று! இன்றைக்கு இராத்திரியே பெரிய கவுண்டரிடம் சொல்லி விடுகிறேன்!"

"போலீஸ்கார ஐயா! நீங்கள் ஒன்றும் சொல்லாமல் சும்மா இருந்தால் அதுவே பெரிய உபகாரமா யிருக்கும்! நாளைக் காலேயில் நானே எல்லாம் சொல்லிக் கொள்வேன்!" என்ருன் செங்கோடன்.

போலீஸ்காரன் போன பிறகு குடிசைக்குள்ளே போய் லாந்தரை நன்ருய்த் தூண்டிவிட்டுச் சுற்று முற்றும் பார்த்தான். ஒரு அடுப்பில் குழம்பு கொதித்து அடங்கி யிருந்தது. இன்னெரு அடுப்பில் பழைய சாம்பல் குவிந்திருந்தது! அந்த அடுப்பை உற்றுப் பார்த்துவிட்டு, "எப்படிப் பட்ட சித்திரகுப்தனு யிருந்தாலும் கண்டுபிடிக்க முடியாது. நாம் பயப்படுவது அநாவசியம்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான்.

இராத்திரி பாயில் படுத்த பிறகு, செங்கோடனுடைய மனதில் பலவிதமான எண்ணங்கள் அலேமோதிக் குமுறின. அவற்றின் மத்தியில், 'ஏதோ ஒரு முக்கியமான விஷயம் மறந்துபோய் விட்டது.—அதை எப்படியாவது ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்' என்று எண்ணிப் பெரும் பிரயத்தனம் செய்தான். எவ்வளவோ முயன்றும் அது ஞாபகத்துக்கு வராமலே தூங்கிப் போனுன்.

## 11

மறுநாள் காலேயில் செங்கோடன் வழக்கம்போல் வீடு சுத்தம் செய்து விட்டு, கேணியில் பாதித் தண்ணீர் இறைத்து விட்டு, குளித்து வெள்ளை வேட்டி சொக்காய் தரித்துக் கொண்டு, கொப்பனும்பட்டிக்குப் போனுன். பெரிய கவுண்டர் செங்கோடனைப் பார்த்ததும் ஆச்சரியப் பட்டதுபோல் பாவனை செய்து, "நீ எங்கே வந்தாய்?" என்று கேட்டார்.

"என்ன, மாமா! அப்படிக் கேட்டீங்க ஒரு கேள்வி? நான் வரக் கூடாதா?" என்ருன்.

"நன்ருய் வரலாம். வரக்கூடாது என்று யார் சொன்னது? ரொம்ப நாளாய் உன்னைக் காணுகிறதே யில்லேயே, எங்களை அடியோடு மறந்து விட்டாயோ என்று பார்த்தேன்."

"அப்படி யெல்லாம் மறப்பேனுங்களா? வெள்ளாமை வேலே அதிகமா யிருந்தது. உங்களுக்குத் தெரியாதா? மழையில்லாமல்..."

"அதெல்லாம் தெரியும், அப்பா! ஆனுல் நீ வெள்ளாமையிலே மட்டும் கவனமாயிருந்ததாகத் தெரிய வில்லேயே? சின்னமநாயக்கன் பட்டிக்கு அடிக்கடி போகிருயாம்! அங்கே யாரோ காவாலிகள் வந்திருக்கிருர்களாம். அவர்களோடு சேர்ந்து கொண்டு திரிகிருயாம்! சாலேயிலே போகிறபோதே ஏதேதோ பேத்திக் கொண்டு போகிருயாம், குடிகாரனைப் போல. அப்படியிருக்க......"

"அதெல்லாம் முந்தாநாளோடே தீர்ந்தது, மாமா! எனக்குத் தாயா, தகப்பனுரா, வீட்டிலே வேறு பெரியவர்களா, யார் இருக்கிருர்கள்? நான் அப்படியே தப்பு வழியில் போனுலும் நீங்கள்தானே புத்தி சொல்லித் திருத்த வேணும்?"

"புத்தி சொன்னுல் நீ கேட்கிற நிலேமையிலே இல்லேயே? அது போகட்டும்; இப்போது எதற்காக வந்தாய்? ஏதாவது யோசனை கேட்பதற்காக வந்தாயா?"

"ஆமாம், மாமா! ஒரு யோசனை கேட்கத்தான் வந்தேன். நம்ப செம்பாவைக் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று வெகு

நாளாக எனக்கு எண்ணம். அதைப் பற்றி இன்றைக்குப் பேசி......''

''வெகுநாளாக உனக்கு எண்ணம் என்றால், இத்தனை நாள் ஏன் சொல்லாமலிருக்கவேணும்? இப்போது வந்து சொல்கிறாயே? நான் அந்தப் போலீஸ்காரருக்கு வாக்குக் கொடுத்து விட்டேனே?''

''அது எப்படி நீங்கள் வாக்குக் கொடுக்கலாம்? செம்பா விஷயமாக என் மனதில் இருந்த உத்தேசம் உங்களுக்குத் தெரியாமலா இருக்கும்?''

''மறுபடியும் அதையே சொல்லுகிறாயே? மனதிலே உத்தேசம் இருந்தால் என்ன பிரயோசனம்? வாயை விட்டுச் சொல்கிறதுதானே? கடவுள் வாயை எதற்காகக் கொடுத்திருக்கிறார்?''

''சரி; இப்போதுதான் வாயை விட்டுச் சொல்லியாகிவிட்டதே! ஒரு மழை நல்லாப் பெய்து ஊரிலே கொஞ்சம் செழிப்பு உண்டாகட்டும், அப்புறம் உங்களிடம் வந்து கேட்கலாம் என்று எண்ணியிருந்தேன்.''

''மழை பெய்யாவிட்டால் உனக்கு என்ன? மற்றவர்களுக்குக் கஷ்டம். உன் கேணியிலேதான் வற்றாமல் தண்ணீர் வருகிறது! சோளம், நெல் எல்லாம் நன்றாய் வந்திருக்கிறதே?''

''நான் மட்டும் நல்லாயிருந்தால் போதுமா? உங்கள் காட்டிலும் மழை பெய்து நல்லா விளைந்தால்தானே என் சோளம் எனக்குக் கிட்டும்! இல்லாவிட்டால் இந்த வீட்டுக் குழந்தைகள் வந்து சோளம் முற்றுகிறதற்குள்ளே பிடுங்கித் தின்றுவிடமாட்டார்களா?''

''தம்பி! நானும் பார்த்தாலும் பார்த்தேன். உன்னைப்போன்ற கருமியைப் பார்த்ததில்லை. செம்பாவுக்கு நீதான் சரியான புருஷன். அவள் பெரிய ஊதாரி......''

''அதெல்லாம் உங்கள் வீட்டிலே; என்னிடத்துக்கு வந்தால் சரியாய்ப் போய்விடும். குடும்பப் பொறுப்பு வந்துவிடும் அல்லவா?''

இச்சமயம் செம்பாவின் தம்பி தான் படித்துக் கொண்டிருந்த பாடத்தை நிறுத்திவிட்டு, ''அப்பா! நம்ம அக்காளை அந்தப் போலீஸ்காரருக்கே கட்டிக் கொடுங்க! இந்த ஆளுக்குக் கொடுக்காதீங்க!'' என்றான்.

''ஏண்டா, அப்படிச் சொல்லுகிறாய்? நம்ம செங்கோடனுக்கு என்ன குறை வந்தது?''

''நேற்று அந்தப் போலீஸ்காரர் பெப்பர்மிண்ட் வாங்கிக் கொண்டு வந்து எனக்குக் கொடுத்தார். அப்புறம் ஒரு நாள் எங்களையெல்லாம் ஸினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போவதாகச் சொல்லியிருக்கிறார். இந்தக் கருமிக் கவுண்டர் என்னத்தைக் கொடுப்பார்?''

''தம்பி! நான் உனக்கு அன்றைக்குக் கொடுக்கவில்லை?'' என்றான் செங்கோடன்.

''என்ன கொடுத்தீங்க? ஒன்றும் கொடுக்கவில்லை! சும்மாச் சொல்றீங்க!'' என்றான் பையன்.

''நினைச்சுப் பார், தம்பி! நீ அன்றைக்கு என் சோளக் கொல்லைக்கு வந்து சோளக் கொண்டை ஒடித்த போது நான் ஓடிவந்து உன் முதுகில் நாலு அடி கொடுக்கவில்லை? ஒன்றுமே கொடுக்கவில்லை என்கிறாயே?''

உள்ளேயிருந்து கலீர் என்று சிரிக்கும் சத்தம் கேட்டது.

பெரிய கவுண்டரும் புன்னகை பூத்தார். ''சரி; இப்போது என்ன சொல்கிறாய்?'' என்றார்.

''என்ன சொல்கிறது? கலியாணத்துக்குத் தேதி வைக்க வேண்டியது தான்!'' என்றான் செங்கோடன்.

''அடுத்த தை மாதத்திலே வைத்துக் கொள்ளலாமே!''

''அவ்வளவு நாள் ஏன் தள்ளிப் போடணும்? இந்த மாதத்திலேயே வைத்து விடுங்க! இனிமேல் தாமதிக்கிறது உசிதமில்லை!''

''அது என்ன, அவ்வளவு அவசரப்படுகிறாய்! அந்தப் போலீஸ்காரருக்கு வேறு நான் சமாதானம் சொல்லியாக வேண்டும்.''

''அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். 'நான்தான் செம்பாவைக் கட்டிக்கொள்ளப் போகிறேன்' என்று நேற்றே சொல்லி விட்டேன்.''

''அப்படியென்றால், அடுத்த வாரத்திலே புதன்கிழமை ஒரு முகூர்த்தம் இருக்கிறது. கலியாணம் வைத்துக் கொள்ளலாமா?''

''அப்படியே வைத்து விடுங்கள். இன்னும் சீக்கிரமாய் வைத்தாலும் சரிதான்!'' என்றான் செங்கோடன்.



செங்கோடன் தலை நிமிர்ந்து, "அது வாஸ்தவந்தான். அதற்கு என்ன செய்யவேணும்?" என்றான்.

"இவர் ஆண்பிள்ளைதானே? பெண்பிள்ளை கன்னத்தில் அறைந்தால் இவர் ஏன் சும்மா வர வேணும்? திருப்பி நாலு அறை கொடுப்பதற் கென்ன?"

"பெண்பிள்ளையா யிருந்தபடியால்தான் சும்மா விட்டுவிட்டு வந்தேன். ஆண் பிள்ளையா யிருந்தால் அங்கேயே பொக்கையில் வைத்திருப்பேன்!"

"பெண் பிள்ளையா யிருந்தால் அதற்காகச் சும்மா விட்டுவிடுவதா? அவள் தவடையில் இரண்டு அறை கொடுத்து விட்டு வர வேணும். இல்லாவிட்டால்......"

"இல்லாவிட்டால்......?"

"இல்லாவிட்டால் நான் போய் அவள் கன்னத்தில் நாலு அறை கொடுத்துவிட்டு வருவேன். அதற்குப் பிறகுதான் கலியாணம்!" என்றாள் செம்பவளவல்லி.

## 12

அன்று சாயங்காலம் செங்கோடன் சின்னமநாயக்கன் பட்டிக்குப் போனான். அங்கே எஸ் ராஜ், பங்காரு முதலியவர்கள் குடியிருந்த வீடு பூட்டிக் கிடந்தது.

பிறகு ஸினிமாக் கூடாரத்துக்குப் போனான். அவர்களைக் காணவில்லை. "மானேஜர் எங்கே?" என்று கேட்டான். யாரோ ஒருவரைக் காட்டினார்கள். அவர் எஸ்ராஜுவும் அல்ல; பங்காருசாமியும் அல்ல. விசாரித்ததில் பழைய மானேஜர் 'டிஸ்மிஸ்' ஆகிப் புது மானேஜர் வந்துவிட்டார் என்று தெரிய வந்தது!

பொய் மான் கரடுக்கு வந்தான். போலீஸ்காரன் நிற்கக் கண்டான்.

"அதுதான் சரி, தம்பி! கடிதத்தில் கண்டபடி வந்து விட்டாயே?" என்றான் போலீஸ்காரன்.

"வந்தேன். வந்து என்ன பிரயோஜனம்? ஆசாமிகளைக் காணோமே?"

"எந்த ஆசாமிகளைத் தேடுகிறாய்? உனக்குக் கடிதம் எழுதியவன் இந்தப் பொய் மான் கரடுக்குப் பின்புறம் காத்துக் கொண்டிருக்கிறான்!......"

இந்தச் சமயத்தில் உள்ளே யிருந்து செம்பவளவல்லி அவசரமாக வந்தாள்.

"அப்பா! இவரிடம் ஒரு கேள்வி கேட்க வேணும். அதற்குச் சரியான பதில் சொன்னால்தான் கலியாணம்!"

"கேட்டுக் கொள்! நன்றாய்ச் சந்தேகமற என்னென்ன கேட்க வேணுமோ எல்லாவற்றையும் இப்போதே கேட்டுக் கொள்! நீயும் இவனும்தானே ஆயுள் முழுதும் வாழ்க்கை நடத்தவேணும்?" என்றார் பெரிய கவுண்டர்.

"ஸினிமாக் கொட்டகையிலே ஒரு பெண்பிள்ளை இவரைக் கன்னத்திலே அடித்தது வாஸ்தவமா?" என்றாள்.

செங்கோடன் தலையைக் குனிந்து கொண்டு யோசித்தான்.

"ஏன் தலையைக் குனிந்து கொள்கிறாய்? என் கேள்விக்குப் பதில் சொல்லப்போகிறாயா, இல்லையா?"

"ரொம்ப தூரம் பார்த்து வைத்திருக்கிங்களே? ஆனால் அந்த இரண்டு ஆண் பிள்ளைகளும் எங்கே?" என்று கேட்டு விட்டு, ஸினிமாக் கூடாரத்தில் தான் விசாரித்துத் தெரிந்து கொண்டதைச் சொன்னான்.

"அந்த ஆள்களைத்தான் நானும் தேடிக் கொண்டிருக்கிறேன். டிமிக்கி கொடுத்து விட்டார்கள் போலத் தோன்றுகிறது! அது போனால் போகட்டும். நீ இந்த மலைக்குப் பின்னால் போய் அந்தப் பெண்ணின் கதையைக் கேள்!"

"ஆகட்டும்; நீங்களும் பக்கத்திலே எங்கேயாவது இருங்கள்!"

"பயமா யிருக்கிறதா, தம்பி!"

"பயம் ஒன்றுமில்லை; பக்கத்தில் சாட்சிக்கு யாராவது இருக்கட்டுமே என்று பார்க்கிறேன்!"

இப்படிச் சொல்லி விட்டுச் செங்கோடன் 'பொய்மான் கரடு'க்குப் பின்புறமாகப் போனான். அங்கே ஒரு தனியான இடத்தில் மொட்டைப் பாறை ஒன்றின் மீது குமாரி பங்கஜா உட்கார்ந்திருந்தாள். அசோக வனத்துச் சீதையைப் போலவும் காட்டில் தனியாக விடப்பட்ட தமயந்தியைப் போலவும் அவள் சோகமே உருவம் எடுத்தவளாய்த் தோன்றினாள்.

"இது என்ன? இங்கே தனியாக வந்து எதற்காக உட்கார்ந்திருக்கிறாய்? உன்னைப் பார்த்தால், லோகிதாசனைப் பறி கொடுத்த சந்திரமதியை மாதிரி இருக்கிறதே?" என்றான் செங்கோடன்.

அப்போதுதான் செங்கோடன் வந்ததைத் தெரிந்து கொண்டவள் போல் குமாரி பங்கஜா அவனை ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு சேலைத் தலைப்பினால் முகத்தைமூடிக்கொண்டு விசித்து விசித்து அழுதாள்.

செங்கோடன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு அவளைச் சமாதானப்படுத்த முயன்றான். பாவம்! அந்தப் பட்டிக்காட்டுக் குடியானவனுக்குச் சோகத்தில் ஆழ்ந்த கதாநாயகியை எப்படிச் சமாதானப் படுத்துவது என்பது என்னமாய்த் தெரியும்? தெரியாமல் சிறிது நேரம் திகைத்து நின்றான். பிறகு, இப்பேர்ப்பட்ட நிலைமையில் என்ன செய்ய வேண்டும் என்று செம்பா சொல்லிக் கொடுத்தது ஞாபகத்துக்கு வந்தது.

அந்தப்படி செய்வதற்கு எண்ணி அந்தப் பெண்ணின் முகவாய்க் கட்டையைத் தொட்டான்.

உடனே குமாரி பங்கஜா இரண்டாவது தடவையாகப் பளீர் என்று செங்கோடன் கன்னத்தில் அறைந்தாள். பாவம்! செங்கோடன் கன்னத்தைத் தடவிக் கொடுத்துக் கொண்டான்.

சற்றுப் பொறுத்து, "சரி; அப்படி என்றால் நான் போகட்டுமா?



ஏதோ ஆபத்து என்று கடுதாசி எழுதினயே என்று வந்தேன்!'' என்று எழுந்திருக்க முயன்றான்.

உடனே குமாரி பங்கஜா அவனுடைய கைகளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டாள். "என்னை நீயும் கைவிட்டு விட்டால் நான் இந்தப் பாறையிலிருந்து விழுந்து சாகவேண்டியதுதான்!'' என்று சொல்லி விட்டு அவனுடைய தோளில் முகத்தை வைத்துக் கொண்டு விம்மினள்.

செங்கோடன் கஷ்டப்பட்டுத் தன்னுடைய கைகளையும் தோளையும் விடுவித்துக் கொண்டான். அந்தப் பெண் பூசிக் கொண்டிருந்த 'ஸெண்டு' அவனுடைய மூக்கைத் துளைத்துத் தலைவலியை உண்டு பண்ணிற்று!

"அப்படியானல், உனக்கு என்ன கஷ்டம் என்று சொல்? என்னல் முடிந்த உதவி செய்கிறேன். . அந்த இரண்டு ஆண் பிள்ளைகளும் எங்கே?'' என்று கேட்டான்.

"அவர்கள் பேச்சையே எடுக்காதே! துரோகிகள்! பாதகர்கள்! சண்டாளர்கள்! என்னை ஆசை காட்டி அழைத்துக் கொண்டு வந்து, என் நகைகளையெல்லாம் பிடுங்கிக் கொண்டு, பணத்தையும் பறித்துக் கொண்டு...''

"ஐயோ! இது என்ன அநியாயம்! உன் சொந்தத் தமையனு அப்படிச் செய்து விட்டான்?''

"உன்னிடம் நிஜத்தைச் சொல்வதற்கென்ன? அவன் என்னுடைய தமையன் அல்ல; அவன் எனக்கு எந்தவித உறவும் இல்லை!''

"இன்னொருவன் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்றானே?''

"அதுவும் பொய்!''

"பின் ஏன் அவர்களுடன் வந்தாய்?''

"என்னை ஸினிமாவில் சேர்த்து விடுகிறேன் என்று ஆசை காட்டி அழைத்துக் கொண்டு வந்தார்கள்! பாவிகள்! அவர்கள் நாசமாய்ப் போகவேணும்!''

"வீணுக அலட்டி என்ன பிரயோஜனம்? அவர்கள் இப்போது எங்கே சொல்? செம்மையாகத் திட்டி விடுகிறேன். ஒரு பெண்பிள்ளையை இப்படியா மோசம் செய்வது? அவர்கள் இப்போது எங்கே?'' என்று மறுபடியும் கேட்டான்.

"யாருக்குத் தெரியும்? இத்தனை நேரம் ரயில் ஏறியிருப்பார்கள்! கையிலே ரயில் சார்ஜுக்குக் கூடப் பணம் இல்லாமல் என்னை விட்டு விட்டுப் போய் விட்டார்கள். நீதான் என்னைக் காப்பாற்ற வேணும். உன்னைத்தான் நம்பி யிருக்கிறேன்.''

"எதற்காக இப்படி உன்னை விட்டு விட்டு அவர்கள் போனர்கள்? ஏதாவது சண்டை வந்துவிட்டதா, என்ன?''

"அதையும் சொல்லி விடுகிறேன். உன்னை ஏமாற்றி உன்னிடம் இருக்கும் பணத்தைப் பறிக்க வேண்டும் என்று அவர்கள் சொன்னர்கள். நான் கூடாது என்றேன். அதனல்...''

"என்னிடம் இருக்கும் பணமா? என்னிடம் பணம் ஏது?''

"நீ பணம் சேர்த்துப் புதைத்து வைத்திருக்கிறாய் என்று யாரோ சொல்லி விட்டார்கள். நீ கூடக் கஞ்சா மயக்கத்திலே இரண்டொரு தடவை சொல்லி விட்டாய்...!''

செங்கோடன் ஏதோ மறந்துபோன விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளப் பார்த்தான் அல்லவா? அது இப்போது பளிச்சென்று ஞாபகம் வந்து விட்டது. கஞ்சா மயக்கத்தில் அந்தத் திருட்டுப் பயல்களிடம் சொல்லக் கூடாத இரகசியத்தைச் சொல்லி விட்டதாக நினைவு வந்தது. உடனே செங்கோடன் அளவில்லாத பரபரப்பு அடைந்து எழுந்து நின்றான்.

"எங்கே போகிறாய்?'' என்று சொல்லி அவன் கையைப் பற்றிக் குமாரி பங்கஜா இழுத்து உட்கார வைக்க முயன்றாள்.

"வெறுமனே இங்கே உட்கார்ந்திருந்து என்ன லாபம்? அந்தத் திருட்டுப் பயல்களை உடனே கண்டு பிடிக்க வேண்டாமா? இந்தக் காட்டுக்கு அந்தப்புறத்தில் போலீஸ்காரர் இருக்கிறார். வா, போய்ச் சொல்லலாம்!''

"ஐயோ! போலீஸ்காரரா? எனக்குப் பயமாயிருக்கிறதே!''

"பயம் என்ன? நீ நேற்று அவரிடம் தானே எனக்குக் கடுதாசி கொடுத்து அனுப்பினய்?''

"ஆமாம்; வேறு யாரும் இல்லாத படியால் அவரிடம் கொடுத்து அனுப்பினேன். கடிதத்தில் எழுதியிருந்த விஷயம் அவருக்குத் தெரிந்து போச்சோ?''

"தெரியாமல் எப்படி யிருக்கும்? அவர்தான் கடிதத்தைப் படித்தார்!''

"ஐயையோ! அதனலேதான் அவர் இங்கே வட்டமிடுகிறார் போலிருக்

கிறது. கவுண்டரே! எனக்குப் பயமாயிருக்கிறது. அந்தப் போலீஸ்காரப் பாவி என்மேல் மோகம் கொண்டிருக்கிறான்!"

"அப்படியிருந்தால், அவனையும் ஒரு கை பார்த்து விடுகிறேன். வா, போகலாம்!" என்று சொல்லிச் செங்கோடன் மள மள வென்று மலைமீது தாவி ஏறினான். குமாரி பங்கஜாவும் மூச்சு வாங்க, அவனைத்தொடர்ந்து ஏறினாள்.

இருவரும் பொய்மான் கரடின் உச்சியை அடைந்தார்கள்.

நிலவின் வெளிச்சம் குமாரி பங்கஜாவின் முகத்தில் விழுந்தது. செங்கோடன் அசப்பில் அவள் முகத்தைப்பார்த்தான். அவனுடைய சந்தேகம் உறுதிப்பட்டது. அவள் அழவும் இல்லை; கண்ணீர் விடவும் இல்லை! அவ்வளவும் பாசாங்கு! வேஷம்! நடிப்பு!

செங்கோடன் அந்தப் பாறையின் உச்சியிலிருந்து சாலையைப் பார்த்தான். சாலையில் ஜன நடமாட்டமே இல்லை. போலீஸ்காரரையும் காணவில்லை. எங்கே போயிருப்பார்? அடாடா! சாட்சி இல்லாமல் போய் விட்டதே!

செங்கோடனுடைய பார்வை மேலும் கிழக்கு நோக்கிச் சென்றது. அவனுடைய கேணியும் குடிசையும் இருந்த இடத்துக்குச்சென்று நின்றது! ஆகா! அது என்ன? அவனுடைய குடிசைக்குள்ளே என்ன வெளிச்சம்? எப்படி வந்தது? யாராவது...!

உடனே அவன் ஒரு நிச்சயத்துக்கு வந்தான். "இதோ பார்! என்னுடைய குடிசையில் ஏதோ வெளிச்சமாயிருக்கிறது. நெருப்புப் பிடித்துக் கொண்டது போல் தோன்றுகிறது. நான் உடனே போய்ப் பார்க்கவேணும். நாளைக்கு மறுபடி வருகிறேன். மற்ற விஷயங்கள்..." என்று அவன் சொல்வதற்குள், குமாரி பங்கஜா "ஐயோ! என்னை நீயும் விட்டுவிட்டுப் போய் விட்டால் என் கதி என்ன?" என்று கூச்சலிட்டு, அவனுடைய சட்டைத் துணியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

செங்கோடன் கையை ஓங்கினான். பளீர் பளீர் என்று அவளுடைய ஒரு கன்னத்தில் இரண்டு அறை அறைந்தான். சுளீர் சுளீர் என்று இன்னொரு கன்னத்தில் இன்னும் இரண்டு அறை கொடுத்தான்.

"இதோ பார்! நான் போவதைத் தடுத்தாயோ உன்னை நானே இந்தப் பாறையிலிருந்து தள்ளிக் கொன்று விடுவேன்!" என்றான்.

குமாரி பங்கஜா விம்மிக் கொண்டே "உன்னை நான் தடுக்கவில்லை. ஆனால் நீ என்னைக் கொன்றாலும் சரி, உன்னோடு நானும் வருவேன். எனக்கு வேறு கதியில்லை!" என்றாள்.

செங்கோடன் முன்னால் விரைந்தோட, குமாரி பங்கஜாவும் இரைக்க இரைக்க அவனோடுஓடினாள். (தொடரும்)

---

## தஹேஜ் (வரதட்சணை)

எந்தச் சர்வ சாதாரண விஷயமும் உண்மைக் கலைஞரின் கைபட்டால் புத்துயிர் பெற்று அழகுற விளங்கும் என்ற இலக்கணத்துக்கு இலக்கியமாக இருக்கிறது கலைஞர் வி. சாந்தாராம் டைரக்ட் செய்துள்ள 'தஹேஜ்'

வரதட்சணைக் கொடுமையை எதிர்த்து, ராஜ் என்ற இளைஞன் சந்தா என்ற ஒரு ஏழை மத்தியதர வகுப்பினரின் பெண்ணை மணக்கிறான். ஆமாம், கல்யாணத் தறுவாயில் வரதட்சணை, சீர் செனத்தி ஆகிய காரணங்களால் கிற்க இருந்த சமயத்தில் தைரியமாக முன் வந்து மணமகன், பெண்ணை மனைவியாக ஏற்றுக் கொள்ளுகிறான். ஆனால் அதற்குப் பிறகும் வரதட்சணைப் பேய் தலைவிரித்து ஆடுகிறது.

புது வீட்டுப் பெண்ணைப் படாத பாடு படுத்துகிறாள்; வீட்டை விட்டு விரட்டுகிறாள் மாமியார்க்காரி. அது மட்டுமா? தன் மகனுக்கு வேறு கல்யாணமே செய்து வைக்கத் துணிகிறாள்:—மிச்சத்தைத் திரையில் பார்த்துக் கொள்ளவும்.

மருமகள் சந்தாவாக நடிக்கும் ஸ்ரீமதி ஜெயஸ்ரீ, சந்தாவின் தந்தையாக நடிக்கும் ஸ்ரீ பிருதிவிராஜ், சந்தாவின் கணவனாக நடிக்கும் ஸ்ரீ கரன் திவான் ஆகிய எல்லாருமே பாத்திரங்களின் குணத்தை உணர்ந்து அற்புதமாக நடித்திருக்கிறார்கள். எல்லாரும் பார்த்து அனுபவிக்க வேண்டிய அருமையான படம். ஹிந்தி நன்கு தெரிந்தவர்கள் இரண்டு மூன்று தடவைகூடப் பார்க்கலாம்.

# வால் நீண்ட கருங்குருவி

**மா. கிருஷ்ணன்**

நமது வீடுகளைச் சுற்றி சகஜமாய் வசிக்கும் பிராணிகளைக் கூட அநேகருக்குத் தெரியாது. தமிழ் அகராதிகளைப் போல் 'ஒருவிதச் செடி' 'ஒருவிதக் கொடி' 'ஒரு விலங்கு' 'பறவை வகை' என்று நம்முடன் இந்த வாழ்வைச் சுமக்கும் சகவாசிகளை அறிவார்கள். இப்படித் தம் போக்கையே கவனித்து, வாழ்க்கைச் சுவையின் செம்பாதியை உல்லவா அவர்கள் இழந்து விட்டார்கள்! 'பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம்' மட்டுந்தானா பிறவா நாள்? பகல் நிலத்தையும், இருண்ட வானத்தையும், வெயிலையும், புதுமையில் வீசும் மண் வாசனையையும், பசியையும், பசி தீர்ந்த திருப்தியையும், பிறவியையும், சாவையும் நம்முடன் கூடிப் பங்கிட்டு வாழும் பிராணிகளைப் பேசாத நாளும், பிறவா நாளே என்று நான் சொல்லுவேன். இருந்தாலும், என்னதான் தன்னை விளாம்பி கண் மூடி ஜீவித்தாலும், இயற்கையின் அறிமுகமில்லாதிருப்பது சாத்தியமில்லை. நாம் பராமுகமாயிருந்த போதும் நமது நடத்தையால் சில பிராணிகள் நம் கவனத்தைக் கவரும். இங்கே சித்திரித்துள்ள வால் நீண்ட கருங்குருவியை உதாரணமாகக் கொள்ளலாம். இதைத் தெரியாதவர் கிடையாது.

வேலிகளிலும், வயல் நடுக் கம்பங்கள் மீதும், தபால் இலாகாத் தந்திகள் மேலும் இந்தக் குருவி கம்பீரமாக அமர்ந்திருக்கும். அதன் இருப்பிலும் தோற்றத்திலுமே அதற்குள்ள பயமற்ற சுபாவம் விளங்கும். எல்லோரும் கண்ட பறவையாதலால் அதை வர்ணிக்க வேண்டியது இல்லை. மிகப் பொருத்தமாகத் தமிழில் அதற்குப் பெயர்கள் அமைந்திருப்பதைமட்டும் குறிப்பிடுகிறேன். ஆங்கிலத்தில், பெபரிலேயே வர்ணனை யடங்கிய பல பறவை நாமங்களுண்டு. 'சாம்பல் தலை' 'அகப்பை யலகு' 'வெண்மார்பு' முதலிய அடைமொழிகளைக் கூட்டி இனப் பெயர்களைத் தனிப் பெயர்களாக மாற்றி, பறவைகளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். தமிழிலும் இதுபோல் பெயர்களுண்டு என்பதற்கு வால் நீண்ட கருங்குருவி போதுமான அத்தாட்சி. வால் நீண்டிருப்பதுடன் மீன்போல் இரு பிளவு பட்டிருப்பதால் அதைக் 'கருவாட்டுவால்' என்று அழைக்கிறார்கள்.

இப்படி நுனியில் வால் பிளவுபட்டிருப்பது வெகு சாமர்த்தியமாகப் பறக்கும் பட்சிகளின் அறிகுறி. வால் நீண்ட கருங்குருவி ஆகாசத்தில் வட்டமிட்டு நெடுந்தொலைவு பறக்காது. ஒரு கம்பத்தின் உச்சியிலோ, உயர்மரக் கொப்பிலோ, உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருக்கும். எங்கேயாவது ஒரு பூச்சியைக் கண்டால் தன்னிருப்பிடத்தை விட்டு அதைத் துரத்திப் பறக்கும். அப்போது குருவி வாலை விரிநியும் மடித்தும் சுருவளி போல் சுழன்றாடி இரை பிடிப்பதைக் கண்டால், அதன் வால் பிளவு பட்டிருப்பதன் காரணம் புலப்படும். சில வேளைகளில் இப்படி இரை வரு மட்டும் காத்திராமல் மேயப்போகும் மாடுகளின் மீது சவாரி செய்து வேட்டைக்குச் செல்லும். அப்பொழுது மாடுகளின் குளம்படிகளில் மிதிபடாது தப்பத் துள்ளும் தத்துக் கிளிகளைப் பிடித்துப் பசியாற்றிக் கொள்ளும்.

கோடை முடிவில் வால் நீண்ட கருங்குருவிகள் ஓங்கி வளர்ந்த ஒரு மரத்தின் மேல் கிளைகளில் கூடுகட்டிக் குஞ்சு பொரிக்கும். கூடு இருக்கும் மரத்தின் அருகில் காகம் பருந்து முதலிய சிகந் திருடர்கள் அணுகாது குருவிகள் சதா பாரா இடும். அறியாமையினால் ஒரு பருந்து அந்தப் பக்கமாக வட்டமிட்டு வந்தால், குருவிகள் உடனே மேலே பறந்து குத்தித் துளைக்கும் அம்புகளைப் போல் அதன் முதுகின் மீது பாயும். சுழல் வேகத்துடன் காற்றில் புரண்டு திரும்பும் சாதுரியமற்ற பெரும் பருந்து இந்தக்குருவிகளுக்குப் பயந்து இறக்கை யடித்து ஓடுவது பார்ப்போருக்குச் சிரிப்பூட்டும் காட்சியே. தங்கள் முட்டைகளையும் குஞ்சுகளையும் சூறையாடும் எதிரிகளை விரட்ட இயலாத மணிப்புறுவும் 'ஓரியோல்' என்ற பட்சியும் வால் நீண்ட கருங் குருவி கூடுகட்டின மரத்தின் கிளைகளில் தாங்களும்



கூடு கட்டி, பராக்கிரம சாலியின் விழியில் தங்களுடைய சந்ததியைப் பெருக்கும்.

வால் நீண்ட கருங்குருவியின் குரல் சற்று கரடுத்தனமாகவே யிருக்கும். நாள்முழுதும் இந்தக் குரல் அபூர்வமாகவே கேட்கப்படும். அதிகாலையில் இன்னமிருள் சூழ்ந்து, குளிரும் சீக்கிரம் பொழுது விடிந்து விடுமென்ற ஒரு உணர்ச்சியும் கொண்ட வாடை விசுகையிலே, வால் நீண்ட கருங்குருவிகள் பாடும். அந்த வேளைக்கு அவைகளின் குரல் இசைந் திருக்கும்—வருநாளைப் போற்றி வரவேற்றும் மங்களமாக அப்போது அவ்வொலி முழங்கும்.



சில சந்தர்ப்பங்களில் இந்தக் குருவியைக் கண்டால் மிக அதிருஷ்டமான சகுனமென்று ஒரு நம்பிக்கையுண்டு. அதாவது, காணுபவர் ஏதாவது காரியமாகப் புறப்படும் பொழுது அவர் குருவிகளை அப்பிரதட்சணமாகக் கடந்து, அவர்களின் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்தை நோக்கிப் பறந்து செல்ல வேண்டும் இந்தச் சகுனம் வாய்த்தால் கொண்ட காரியம் கைக்கூடுமென்பதில் சந்தேகமில்லையாம். இதைக் குறிக்கும் ஒரு பழமொழியை (நவ நாகரிகத்துக்குத் தகுந்தபடி சற்றுத் திருத்தியே) இங்கு தருகிறேன்:

"வால் நீண்ட கருங்குருவி
வலமிருந்து இடஞ்சென்றால்
கால் நடையாய்ச் சென்றவரும்
காரில் திரும்புவரே!"

இது போன்ற பழமொழிகளிலும், சகுனம் குறி முதலியவைகளிலும், நம்பிக்கை கொள்ளுவது தற்கால நாகரிகத்திற்குப் பொருத்தமில்லை. இருந்தாலும், இந்த ஒரு சகுனத்தில் மட்டும் எனக்குச் சம்பூர்ண நம்பிக்கையுண்டு.

# அக்கப் போர்

ஸ்ரீ கே. எம். முன்ஷி 'வியாஸர் காஞ்சியில்தான் ஸ்ரீமத் பாகவதம் பாடினார்' என்று கூறினாராம். அதற்குச் 'சரித்திரத்தில் ஆதாரம் இல்லையே' என்று அங்கலாய்க்கிறார் ஒரு ஆராய்ச்சியாளர்.

உணவுதான் ஜீவாதாரமான பொருள் என்று அறிந்த பின் மற்ற விஷயங்களுக்கு ஆதாரம் அவசியமில்லை என்று எண்ணியிருக்கக் கூடும்!

★

"விஜயவாடாவில் ஆடு திருடிய இரண்டு பேரைப் போலீஸார் கைது செய்தனர்."
—விஜயவாடா செய்தி

'ஆடு திருடிய கள்ளர்மாதிரி' அவர்கள் விழித்ததிலிருந்து போலீஸார் கைது செய்திருக்க வேண்டும்!

★

இந்தியப் பார்லிமெண்டில் அங்கத்தினர்கள் கேட்கும் ஒவ்வொரு கேள்விக்கும் விடையளிக்கச் சர்க்காருக்கு அறுபது ரூபாய் செலவாகிறதாம்.

இதில் பாதித் தொகையை அங்கத்தினர்களுக்கே கொடுப்பதாக இருந்தால் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் கேள்வி கேட்பதையே நிறுத்திவிடுவார்கள். பொது ஜனங்களின் பணமும் பாதி மிச்சமாகும்.

உணவுப் பஞ்சம் உண்டானதற்கு மழை இல்லாததுதான் காரணம். மழை இல்லாததற்குக் காடுகள் அழிந்ததுதான் காரணம். நாம் அதிகமாக விறகை உபயோகிப்பதும், விறகு வெட்டுவதும்தான் காடுகள் அழிந்ததற்குக் காரணம். ஆகவே, பஞ்சத்தைத் தடுக்க வேண்டுமானால் நாம் விறகு உபயோகத்தைக் கட்டுப்படுத்த வேண்டும்.
—மதுரதாஸ் புருஷோத்தம்ஜி

இவ்வளவு சிரமம் ஏன்? இன்னும் கொஞ்சம் உணவுப் பஞ்சம் ஏற்பட்டால், தானே விறகு உபயோகம் நின்று விடுகிறது. பிறகு வெட்டுவது நின்று, காடு வளர்ந்து, மழை பெய்து, பஞ்சம் தீர்ந்து விட்டுப் போகிறது!

★

"பூட்டை உடைத்து நெய் திருடிய ஆறு பேர் கைது செய்யப்பட்டனர்."—செய்தி

'கையும் நெய்யுமாக ஆசாமிகள் பிடிபட்டு விட்டார்களாக்கும்!

★

"யுத்தபீதியின் காரணமாக லண்டனில் வைரங்கள் விற்பனை வெகுவாக அதிகரித்திருக்கிறது."
—செய்தி

'வைரமுடைய நெஞ்சு வேணும்' என்ற காரணத்தினால் ஒரு வேளை விற்பனை வெகுவாக அதிகரித்திருக்கலாம்!

எனக்கு வயசு ஆக ஆக எந்த 'இஸ'மும் பிடிப்பதில்லை. எனக்கு இந்தியாவிடம்தான் அக்கறை யுண்டே யொழிய எந்தக் குறிப்பிட்ட 'இஸ'த்தின் மீதும் அல்ல.

—பண்டித நேரு

ஆனால் நமக்கு இந்த 'நேரு இஸம்' ரொம்பவும் பிடித்திருக்கிறது!

★

"அரசியல் கட்சிகள் நேர்மையை அனுசரித்து நடக்க வேண்டும்."

—ஒரு மந்திரி

ஏதாவது ஒன்றைத்தானே அனுசரித்து நடக்க முடியும்? ஒரே சமயத்தில் இரண்டையும் எப்படி அனுசரிப்பது?

★

விஜயவாடாவுக் கருகில் ஒரு வயலில் தோண்டிப் பார்த்ததில், 24 தோட்டாக்களும் 4 வெடி குண்டுகளும் இன்னும் வெடி மருந்தும் போலீஸாருக்குக் கிடைத்தன.

—செய்தி

யாரோ முன்னமே பலாத்கார இயக்கத்தைக் குழி தோண்டிப் புதைத்திருக்கிறார்கள்!

★

"உணவு மந்திரி முன்ஷி சென்னைக்கு வந்து போனதில் எனக்கு மிகவும் சந்தோஷம்" என்றார் ஒருவர். "அவர் வந்ததைக் காட்டிலும் போனதில் அதிக சந்தோஷம்!" என்றார் இன்னொரு நண்பர். "ஏன்?" என்று கேட்டார் மூன்றாம் ஆசாமி. "ஸ்ரீ முன்ஷியுடன் உணவு இலாகாவைச் சேர்ந்த ஒரு பட்டாளம் முழுவதும் சென்னைக்கு வந்துவிட்டது. அதனால் இன்னும் சில நாளில் ஏழு அவுன்ஸ் ரேஷன் ஆறு அவுன்ஸாக ஆகிவிடுமோ என்று பயந்தேன். நல்லவேளை சீக்கிரமாகத் திரும்பிப் போய்விட்டார்கள்" என்று குதூகலப்பட்டார் அவர்.

★

உணவு இலாகா உணவு உற்பத்தியைப் பெருக்காவிட்டாலும் அதில் வேலை செய்யும் அதிகாரிகளின் எண்ணிக்கையைப் பெருக்கிக்கொண்டுதான் வருகிறது. டைரக்டர் என்ன, டெபுடி டைரக்டர் என்ன, ஹானரரி டைரக்டர் என்ன, காரியதரிசி என்ன, டெபுடி காரியதரிசி என்ன; கமிஷனர் என்ன, டெபுடி கமிஷனர் என்ன?—கடைசியில் பலன் என்ன? எட்டு அவுன்ஸ் ரேஷன் ஏழு அவுன்ஸ் ஆகியிருக்கிறது. இதைப் பற்றி நினைக்கும்போது ஒரு பழைய சின்னக் கதை ஞாபகத்துக்கு வருகிறது.

ஒருநாள் ஒரு சின்ன அரசன் வெளியே உலாவப் போனான். அப்போது ஓர் உழவன் அழுதுகொண்டு போவதைப் பார்த்தான். அரசன் அவனை அழைத்து, "ஏன் அழுகிறாய்?" என்று கேட்டார். குடியானவன் கையைப் பிசைந்துகொண்டு, "மகாராஜா, நான் ஏழை. இந்நாது கோழிகளை வளர்த்து அவற்றின் முட்டைகளை விற்றுப் பிழைக்கிறேன். இப்போது கொஞ்ச காலமாக அந்த முட்டைகள் சின்னதாகி வருகின்றன. எல்லோரும் வேண்டாம் என்று சொல்லுகிறார்கள்" என்றான்.

அரசன் தன் மாளிகைக்குத் திரும்பி வந்து மந்திரியிடம் எல்லா விவரத்தையும் கூறி, "இதற்கு என்ன செய்யலாம்?" என்று கேட்டான். மந்திரி அரசனை நோக்கி, "மகாராஜா, பொழுது விடிந்ததும் விவசாய இலாக்காவைக் கலந்து யோசனை செய்து கொண்டு வருகிறேன்" என்றார்.

பல நாட்கள் கழிந்தன. அரசன் அவ் விஷயத்தையே மறந்து விட்டான். திடீரென்று ஒருநாள் அவனுக்கு மறுபடியும் ஞாபகம் வந்தது. அவன் மீண்டும் மந்திரியை அழைத்து, "அந்தக் கோழி விஷயம் என்ன ஆச்சு?" என்று கேட்டான்.

"மகாராஜா! அது விஷயமாக ஒரு மகாநாடு கூட்டியிருக்கிறேன். அங்கே அதிகாரிகள் பலர் கூடி இரவு பகலாக விவாதித்து வருகிறார்கள்" என்றார் மந்திரி.

"எதைப் பற்றி விவாதிக்கிறார்கள்?" என்று கேட்டான் அரசன்.

"முட்டை முதலில் தோன்றியதா, கோழி முதலில் தோன்றியதா என்பது முதலில் தெரியவேண்டுமாம். அதற்காகத்தான் விவாதிக்கிறார்கள். ஆஹா, அவர்கள் என்ன அழகாகப் பேசுகிறார்கள்! இத்தனை நாளாக ஆராய்ந்து 'கோழிமுட்டை ஆராய்ச்சிக்கு முடிவுரை' என்ற பெயரில் பன்னிரண்டு புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். அவற்றை வீடு வீடாகக் கொண்டு போய்க் குடியானவர்களுக்கு வாசித்துக் காட்டுகிறார்கள்."

"சரி, வாரும். அந்தக் குடியானவன் வீட்டுக்குப் போய் அவன் கவலை தீர்ந்ததா என்று கேட்போம்."

இருவரும் குடியானவன் வீட்டுக்குப் போனார்கள். அங்கே அதிகாரிகள் பெருங் கும்பலாகக் கூடிப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார்கள். அரசன் குடியானவனைப் பார்த்து, "உன் கவலை தீர்ந்ததா? உன் கோழிகள் இப்போது பெரிய முட்டைகள் இடுகின்றனவா?" என்று கேட்டான்.

அவன் மறுபடியும் கையைப் பிசைந்து கொண்டு, "இல்லை, மகாராஜா! இப்போது என் கோழிகள் முட்டை இடுவதையே நிறுத்தி விட்டன" என்றான்.

"ஏன்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அரசன்.

"அதிகாரிகள் என் வீடு முழுவதும் நிறைந்து விட்டதால், கோழிகள் முட்டை இடுவதற்கு இடமே இல்லை" என்று பரிதாபமாகச் சொன்னான் குடியானவன்.

# ராமகிருஷ்ண உபநிஷதம்




சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 19. அடக்கம்

'அடக்கம் வேண்டும்' 'அடக்கம் வேண்டும்' என்று ஞானம் பெற்றவர்கள் எல்லாம் போதித்து வருகிறார்கள். அடக்கம் சித்திக்கு வழி என்று சாஸ்திரப் பயிற்சி யடைந்தவர்கள் அடக்கத்தை மேற்கொண்டு நடந்து வருகின்றனர். ஆனால் அவ்விதம் மேற்கொண்ட அடக்கத்தைக் காட்டிலும், உண்மைக்குப் பயந்து உள்ளத்தில் மெய்யடக்கம் அமைத்துக் கொள்வது மேலானது. அடக்கம் ஒரு சாதனம் மட்டும் அல்ல. உண்மையில் நாமும் நம்முடைய செல்வமோ அறிவோ மற்ற பாக்கியமோ எம்மாத்திரம்? ஒன்றுமில்லை. அஞ்ஞானத்தினின்று விலகினேமானால் உண்மையே அடக்கத்தைத் தரும்.

ஏழை ஒருவனுடைய குமாரன், தான் பணக்காரனுடைய மகன் அல்ல, பரம ஏழை என்று அறிந்து அதற்குத் தக்கவாறு நடந்து கொள்ளுவது உண்மைக்குப் பயந்த அடக்கம். அது புத்தி சாலித் தனம். வேறு விதம் நடந்து கொள்ளுவது மடமை. அது போலவே யாரேனும் சரி, நான் என்ன பதவியி லிருந்தாலும் என்ன ஐசுவரியம் பெற்றிருந்தாலும் அவற்றின் நிலையும் பயனும் உண்மையில் சிறிது, என்பதைக் கண்டு அடக்கத்துடன் நடந்து கொள்ளுவது புத்திசாலித்தனம். உண்மையைக் கண்டு அதற்குத் தக்கபடி நடந்து கொள்ளுவது அவசியம். அவ்வாறின்றிப் பிறருடைய பாராட்டுதலுக்காக மாத்திரம் அடக்கம் காட்டிக் கொள்ளுவது உண்மை அடக்கம் அல்ல.

* * *

"நான் மகா நீசன், பாவி, எனக்கு வழி காட்ட வேண்டும்" என்று ஒரு சீடன் தன் குருவைக் கேட்டுக் கொண்டான். குருவுக்குத் தெரிந்தது, இவன் இன்னும் உண்மையைக் காணவில்லை, இம்மாதிரி நடந்து கொள்ளுவது சம்பிரதாயம் என்று எண்ணித்தான் இப்படிப் பேசுகிறான் என்பது. இவனுக்கு ஞானப் பிரகாசம் உண்டாக்கலாம் என்று, "சரி! நீ போய் உன்னை விட மதிப்பில் குறைந்த பொருள் ஏதேனும் ஒன்றைப் பார்த்துக் கொண்டுவா" என்றார் குரு.

அதற்கென்னவென்று எண்ணிச் சீடன் வெளியே போனான். ஆனால் போய்ப் பார்த்தபோது தென்பட்ட எந்தப் பொருளும் தன்னை விட மேலானதாகவே கண்டான்.

பரிசுத்தத்திலும் பிறருக்குப் பயன்படுவதிலும் எந்த விதத்திலும் மற்றப் பொருள்களும் ஜீவன்களும் தன்னை விட மேலானதே என்பதைக் கண்டு ஏங்கினான். எதையேனும் தன்னை விட மதிப்புக் குறைந்ததாகக் குருவிடம் கொண்டு போய்த் தந்தால் நமக்குப் போதிய அடக்கமில்லை, தன்னைப் பெரிதாக மதித்துக் கொள்கிறான் என்று குரு எண்ணி விடுவார் என்பதாகப் பயந்தான். என்ன செய்வது என்று அவனுக்குத் தோன்றவில்லை.

மறுநாள் காலை வெளியே காட்டில் மல விசர்ஜனம் செய்யும் போது அவனுக்கு ஒரு எண்ணம் உண்டா

யிற்று. "என் மலம் என்னை விட நீசமான பொருள் என்பதில் சந்தேகமில்லை. இந்த மலத்தைக் குருவினிடம் கொண்டு போய் இது ஒன்றே என்னை விடக் கேவலமான பொருள்; மற்ற எல்லாம் என்னை விட மேலான பொருள்களே என்று சொல்லுவேன்" — இப்படித் தீர்மானித்துக் கொண்டான். இப்படி நடந்துகொண்டால் குருவானவர் தன் அடக்கத்தை மிகவும் பாராட்டுவார் என்று எண்ணினான்.



அப்படியே ஒரு ஓட்டாஞ் சல்லி எடுத்துக் கொண்டு தான் கழித்திருந்த மலத்தை எடுக்கப் போனான்.

"ஹா! ஹா! பாவி! என்னைத் தீண்டாதே!" என்று ஒரு குரல் கேட்டது.

மலத்தினின்று ஒரு அசரீரி பேசிற்று. "போதும், போதும், நீ எனக்குச் செய்தது. மகா பாவியாகிய நீ என்னை மறுபடி தீண்டாதே! நான் ஒரு காலத்தில் சுத்தமான பழமும் பண்டமுமாக இருந்தேன். தெய்வ நைவேத்தியத்திற்குத் தகுந்ததாக இருந்தேன். பார்த்தவர்கள் வாயில் ஜலம் ஊறும் குணம் பெற்றிருந்தேன். என் துரதிர்ஷ்ட வசத்தால் உன்னை அடைந்தேன். நீ என்னை உட்கொண்டாய். உன் உடலில் பிரவேசித்தபின் இந்த நிலையை நான் அடைந்திருக்கிறேன். முன்னே என்னைக் கண்டவர்கள் என் சுவையினாலும் அழகாலும் மனம் கவரப்பட்டார்கள்.

இப்போதோ என்னைக் கண்டால் மூக்கைப் பிடித்துக் கொண்டு தூர விலகிப் போகிறார்கள். இது உன்னால் எனக்கு வந்த கதி. உன்னுடைய ஸ்பரிசத்தின் பலன் இது. ஆகா, உன் குணத்தை என்னவென்று சொல்ல? தயவு செய்து என்னை மறுபடி தீண்ட வேண்டாம். தீண்டுவாயானால் இதைவிடக் கேவலமான கதி எனக்கு வந்து சேருமோ என்னவோ, தூரப்போ!" என்றது.

அப்போது சீடனுக்குத் தன் புன்மை நன்றாக விளங்கிற்று. குருவிடம் சென்று "என்னை விட மதிப்பற்ற பொருள் ஒன்றுமில்லை. நான் கழித்த மலம் கூட என்னை மிகவும் இகழ்கிறது" என்றான்.



# பாதுஷாவின் காதல்

## 2. யாருக்கு அந்த பாக்கியம்?



ரூனுக்குத் தன் புஜபல பராக்கிரமத்தின் மீது அபார நம்பிக்கை இருந்தது. அது அவனுடைய குற்றம் அல்ல. ஏனெனில் எகிப்து நாட்டு மக்களும் எகிப்து நாட்டில் வசிப்போரும் மண்ணுலகத்திலே பரூன் தான் பரமாத்மாவின் அவதாரம் என்றும், சந்திரன், சூரியன் நக்ஷத்திரம், இடி, மின்னல், மேகம் முதலியவற்றுக்கும் சகல ஜீவராசிகளுக்கும் அவன் தான் கண்கண்ட தெய்வம் என்றும் மனப் பூர்வமாக நம்பி வந்தனர்.

ஆகவே, அவனுடைய உருவச் சிலைகள் ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பூஜிக்கப்பட்டு வந்தன. அந்நாட்டு மக்கள் அவன் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் அனைத்தையும் கடவுளின் கட்டளையாகவே மதித்து மரியாதை செலுத்தி வந்தனர். அவனைப் பூஜிக்கும் பொருட்டு அகராதியைப் புரட்டி அழகழகான உயர்ந்த சொற்களைத் தேடி எடுத்து உபயோகித்து வந்தனர். அவனுடைய குடிபடைகள் அவனைத் தெய்வம் என்றே தொழுது கொண்டாடின. ஆகவே அவனை நெருங்கவோ, அவனைத் தொட்டுக் கும்பிடவோ, அல்லது அவனெதிரே தலை நிமிர்ந்து நோக்கவோ அவர்கள் யாருக்குமே தைரியம் எழுந்ததில்லை. அதுமட்டுமல்ல. அவனுடைய மனைவிமார்கள்கூட அவனெதிரே தங்கள் நெஞ்சைத் திறந்து காட்டத் துணிந்ததில்லையென்றால் அவனுடைய பெருமையைப் பற்றி அதிகம் சொல்லுவானேன்?

பரூன் அவர்களையெல்லாம் கொஞ்சமாவது பொருட்படுத்தினால்தானே? அவன் அவர்களையெல்லாம் மனம் சோர்வுற்றிருக்கும் காலங்களில் தன் மனதை மகிழ்வித்திடும் கருவிகளாகவும் தன் காமவேட்கையைத் தணித்துக் கொள்ள உதவும் கைப்பொம்மைகளாகவும் கருதி வந்தான். அவர்களைத் தன் பெருமைக்கும் புஜ பல பராக்கிரமத்துக்கும் ஒரு அளவு



கோலெனவும் மதித்துவந்தான். அவர்கள் எதிரே தன் மனத்தையும், தன் மனதில் சுரக்கும் அன்பு ஊற்றையும் அடிபணியவிட அவன் விரும்பியதே யில்லை. தம் சௌந்தர்ய ரூபத்தின் பக்க பலத்தைக் கொண்டு உலகத்தையே வெற்றி கொண்டு அடக்கியாளும் சக்தி வாய்ந்த எழிலரசிகளின் எதிரே தன் மனோ பலவீனம் வெளிப்பட்டு விட்டால் அப்புறம் தன் பெருமையும் புகழும், பராக்கிரமமும், அதலபாதாளத்தில் அழுந்தி மங்கி விடும் என்பதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். ஆகவே அவன் அவர்களிடையே மிகவும் மிடுக்காகவும் கன கடுமையாகவும்தான் பழகி வந்தான்.

அந்தப் பெண்களின் உள்ளத்தில் அது காறும் பருனும் தங்களைக் காதலிக்கக் கூடும் என்ற எண்ணம் எழுந்ததில்லை. ஏனெனில் அவர்கள் பஞ்ச பூதங்களால் ஆகிய அவனுடைய மண்ணுடம்பை, அழியாப் புகழுடைய தெய்வமாகவே கருதி வந்தனர். 'எந்த நிமிஷம் இந்த மகாதேவர் கொதித்தெழுந்து ரௌத்திராகாரமாக ருத்ரரூபத்தைத் தரித்துக் கொள்ளுவாரோ, யார் கண்டார்கள்?' என்ற பயம் அவர்களை அல்லும் பகலும் அனவரதமும் வாட்டிக் கொண்டிருந்தது. ஆகவே முற்றிலும் வேறு யுகத்திலும் வேறு நாட்டிலும் பிறந்தவர்களான நாம் வியப்புறத் தேவையில்லை.

அந்தக் காலத்தில் அந்த நாட்டு மக்கள் தங்கள் பெண்களைப் பருனின் பாதார விந்தங்களில் எவ்விதத்திலாவது சமர்ப்பிக்க முடிந்து விட்டால், அதைத் தங்களுடைய மாபெரும் பாக்கியமாகவும் புண்ணியமாகவும் கருதி வந்தனர். அந்த மாபெரும் பேற்றையும் புண்ணியத்தையும் பெறும் பொருட்டு, ஆயிரக் கணக்கான லட்சக்கணக்கான முயற்சிகள் செய்து வந்தனர். கல்யாணமாகாத தங்கள் கன்னிப் பெண்களை, உள்ளமும் உணர்ச்சியும் ஒருங்கே அற்று மரத்துப்போன மன்னனின் காலடிகளில், அவனுடைய இரண்டொரு கண நேரத்துச் சந்தோஷத்துக்காகவும் சுகத்துக்காகவும் அர்ப்பணம் செய்யும் விஷயத்தில் வெற்றி கிட்டி விட்டால், அவர்களுக்குப் பகவானே நேரில் கிட்டி விட்டதுபோன்ற பேரானந்தமும் எக்களிப்பும் உண்டாகி விடும். அப்படி அர்ப்பணம் செய்வதில் வெற்றி கண்டோர்களை மக்கள் மிகவும் புகழ்ந்து பாராட்டுவர்.

ஆனால் பருனுக்கோ அந்தப் பெண்களுடன் அதிகமாக நெருங்கிய தொடர்பு கொண்டு விட்டால் தன் மனோ பலவீனம் வெளியாகி விடுமோ என்ற பயம். ஆகவே அவன் பட்டும் படாமலும் தாமரையிலைத் தண்ணீர் போல அவர்களுடன் மிகவும் சர்வ ஜாக்கிரதையாகவே பழகி வந்தான்.

ஆனால் பருனின் அரண்மனை அந்தப்புரத்தில் அதுவரை பட்டமகிஷியின் ஸ்தானம் காலியாக இருந்தது. தேச தேசாந்திரங்களில் உள்ள ராஜாக்களும் மகாராஜாக்களும் அந்தப் பட்ட மகிஷியின் ஸ்தானத்தை அரம்பையர்களுக்கு ஒப்பான தங்கள் திருக்குமாரிகளுக்கு வாங்கி யளிக்கும் பொருட்டு, போட்டி போட்டுக் கொண்டு முயற்சி செய்து கொண்டிருந்தனர். ஆனால் பருனின் கருணைப் பார்வை யார்மீது விழும், எந்தத் தண்ணீர்த் திவலையை முத்தாகப் பரிணமிக்கச் செய்யும், எந்தச் சிறு மணலை ரத்தினம்போலப் பிரகாசிக்கச் செய்யும் என்பதை யார் அறிவார்கள்? அருட்பெருஞ் சோதியின் அன்பு நீர் சுரந்து அணுவிலும் சிறிய மணலில் விழுந்தாலும், அது கோடி சூரியப் பிரகாசமாகப் பிரகாசிக்க வேண்டியதுதானே? அந்தப் பாக்கியம் யாருக்குக் கிட்டப் போகிறது என்று அகில உலகமும் ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. ஆனால் பருன் மிகப் பெரிய பாதுஷா ஒருவனின் மகளைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் தனக்குச் சமதையாக அரசனின் அரியணையில் உட்கார





வைத்துக் கொள்ள ஒருகாலும் விரும்ப மாட்டான் என்று மட்டும் அவர்களுக்குப் பரிபூரணமாக நம்பிக்கை யிருந்தது.

ஆகவேதான் அன்று காதில் விழுந்த செய்தி மக்களைத் திகைத்துத் திக்குமுக்காடும்படி வைத்துவிட்டது. கனவிலும் கருதாத ஒரு செயல் நிகழ்ந்து விட்டால் பிரமிப்பு ஏற்படுவதில் ஆச்சரியம் இல்லை அல்லவா? பருன் நீக்ரோவர்களின் கல்தானான ஷம்லாக்கின் குமாரியைக் கலியாணம் செய்து கொண்டு எகிப்து நாட்டுப் பட்ட மகிஷியாக்கிக் கொள்ள முடிவுசெய்து விட்டான் என்னும் செய்தி மக்களை ஒரேயடியாகத் தூக்கிவாரிப் போடும்படி செய்து விட்டது. இந்தச் செய்தியைக் கேட்ட பின்னரும்கூட மக்களுக்குப் பருனின் மனம் இவ்வளவு மட்டரகமானதாக இருக்கும், மணப் பெண்ணைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் இவ்வளவு கீழ்த்தரமாகப் போய்விடும் என்னும் எண்ணமே எழவில்லை. எனவே, அவர்களுடைய உள்ளம் அந்த முடிவை ஏற்க மறுத்தது.

ஆனால் அவன்தான் பருன் ஆயிற்றே! அவன் வைத்ததுதானே சட்டம்! அவன் சொல்லுக்கு மாறுசொல் சொல்லவோ, அவனெதிரே தலை நிமிர்ந்து நிற்கவோ அக்காட்டில் எவனுக்குத்தான் துணிச்சல் ஏற்பட முடியும்?

மாலைக் கதிரவன் மலைவாயில் விழுந்து மண்ணுலகைப் பொன்னுலகாக்கிக் கொண்டிருந்த வேளையில், சீபா நகரத்துக் குடிகள் அனைத்தும் அரண்மனை வாசலில் குழுமி யிருந்தன. அப்பொழுது எகிப்து நாட்டுப் பிரதானப் புரோகிதன் அரண்மனையின் உப்பரிகையிலே வந்து நின்றான். மக்கள் நம்பாத, நம்ப விரும்பாத அந்தச் செய்தியை அவனே தன் வாயால் சொல்லி அக்கூட்டத்தினிடையே மிகுந்த பரபரப்பையும் கலகலப்பையும் உண்டு பண்ணி விட்டான்.

எகிப்து நாட்டுப் புரோகிதன் சொன்னதாவது:—"சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள், மேகங்கள், மின்னல், இடி, மழை, காற்று—இவற்றுக்கு அதி தேவதையான பருன் அம்னஸ், நீக்ரோவர்களின் கல்தானான ஷம்லார்க்கின் மகளை மணம் செய்து கொள்ளுவது என்றும், அவளையே தம் பட்ட மகிஷியாக்கிக் கொள்ளுவது என்றும் தீர்மானம் செய்து விட்டார். ஆகவே அவ்விருவருடைய க்ஷேமத்துக்காகவும் நலனுக்காகவும் நீலவானத்தைக் கூரையாகவும் பூவுலகைப் பெரிய வீடாகவும் கொண்டுள்ள பகவானை ஒரு வாரம்வரை வேண்டித் தொழ வேண்டும் என்றும் காணிக்கைகள் பல செலுத்தி மகிழ்விக்க வேண்டும் என்றும் உத்தரவிட்டிருக்கிறார்."

அரண்மனைப் புரோகிதர் சொன்ன பிறகு அப்பீல் ஏது? மக்கள் மனமாரப் பகவானை வேண்டியவாறே கலைந்தனர்.

ஆனால் காதலுக்கும் கர்மத்துக்கும் அதி தேவதையான தெய்வமோ பருனுக்கென்று வேறு ஒரு அழகியைத் தேடி வைத்திருந்தது. ஆனால் அன்றுவரை அந்தப் பெண்ணைப் பார்க்கும் பாக்கியம் பருனுக்குக் கிட்டவில்லை.

அதற்கு மறுநாள் இரவு பூர்ண சந்திரன் ஆகாய வீதியிலே தன் சகல பரிவாரங்களும் புடைசூழ அகில உலகத்துக்கும் தன் பால்போன்ற வெள்ளி நிலவைப் பொழிந்துகொண்டு, ஆனந்தமாகப் பவனி வந்து கொண்டிருந்தான். அவன் பவனி வந்து கொண்டிருந்த பொழுது வானவீதி 'தக தக' வென்று ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. விண்ணும் மண்ணும் வெள்ளி முலாம் பூசப்பட்டுக் குளிர்ந்து காட்சி அளித்தன. சந்திரன் பவனி வருவது என்றால் அலங்காரத்துக்குக் கேட்கவா வேண்டும்? அவனுடன் கூடவே அவன் உயிருக்கு உயிராக நேசிக்கும் இருபத்தேழு தாரகைகளும் சர்வாலங்கார பூஷிதைகளாக மிக்க ஒயிலுடன் பவனி வந்து கொண்டிருந்தனர். அவர்களைச் சுற்றித்தான் எத்தனை மினுக்கிப் பெண்கள்! கண்களைச் சிமிட்டிச் சிமிட்டிக் குலுங்கக் குலுங்க நகைத்தவாறு ஒய்யாரமாக பவனி வந்து கொண்டிருந்த அவர்களின் அழகைக் காணக் கோடிக் கண்கள் தான் வேண்டும். அந்த எழிலரசிகளும் பூர்ண சந்திரனும் சேர்ந்து மக்களை மதிமயக்கி இனந் தெரியாததொரு இன்ப லோகத்துக்கு இழுத்துச் சென்று கொண்டிருந்தனர்.

இவ்வாறு வெண்மதி தண்ணிலவைப் பொழிந்துகொண்டிருந்தநேரத்தில்தான், ஷம்லாரின் குமாரியான இளவரசி ஏழு நதிகளிலிருந்து தண்ணீர் மொண்டு வரச் செய்து ஸ்நானம் செய்தாள். பிறகு பகட்டான பட்டாடை உடுத்தி, பரிமள சுகந்தம் பூசி, வெண்மதி விரித்திருந்த தண்ணிலவிலே உட்கார்ந்து எகிப்து நாட்டு எழிலரசிகளின் நாக நடனத்தைப் பார்க்கலானாள். அவள் உடலிலே ஏறியிருந்த பரிமள சுகந்தம் காற்றிலே கலந்து மிதந்து நாலா திசைகளிலும் 'கம்' என்று நறுமணத்தை வாரி வீசிக்கொண்டிருந்தது.

அப்பொழுது அந்தச் சூழ்நிலையில் இருந்தவர்கள் அனைவருமே இன்ப லாகிரியில் மிதந்து கொண்டிருந்தனர் என்றால் இளவரசியின் இதயத்திலே சுரந்து கொண்டிருந்த இன்ப ஊற்றைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? வருங்காலத்தில், தான் வாழப்போகும் ஆனந்த வாழ்க்கையை எண்ணிய மாத்திரத்திலேயே அவள் கன்னங்கள் குழிந்தன. இதழ்கள் இலேசாக விரிந்து இளநகை பாடின. எகிப்து நாட்டுப் பட்டமகிஷி! ஆகா! எவ்வளவு அழகான சொல்! — இந்தக் கற்பனை அவளை இன்ப லோகத்துக்கே இழுத்துச் சென்று விட்டது. கற்பனையில் கிட்டும் இந்த இன்பம் நிஜ வாழ்க்கையில் கிட்டக்கூடியதுதானா? அப்படியே கிட்டினாலும் அது கற்பனை இன்பத்துக்கு ஈடாகத்தான் ஆக முடியுமா?

'நான் பருனுடன் கூடப் பருனின் மாட மாளிகையின் உப்பரிகையின் மீது ஏறி நின்று ஜன்னல் வழியே நாட்டு மக்களுக்குத் தரிசனம் தரும்பொழுது, என் அழகு எவ்வாறு இருக்கும்?' என்று இளவரசி தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். அப்பொழுது அவளுடைய உதடுகள் இன்ப உணர்ச்சிமேலிட்டு இலேசாகத் துடித்தன; கன்னங்கள் கர்வத்தில் பூரித்துச் செக்கச் சிவந்த ரோஜாக் கன்னங்களாக மாறின. (தொடரும்)






## பறவைகளின் வயது என்ன தெரியுமா?









உலகத்திலேயே மிகப் பெரிய மணி, ருஷ்யாவின் தலை நகரான மாஸ்கோவில் இருக்கிறது. இதன் நிறை 200 டன். ☆ ☆ ☆ ☆








இந்தியாவிலுள்ள காடுகளின் மொத்த விஸ்தீரணம் 155,000 சதுர மைல்கள். அதாவது இந்திய பூமியின் விஸ்தீரணத்தில் நான்கில் ஒரு பாகம். ★ ★ ★



ஆகாய விமானத்தை 1903-ம் வருஷம் ரைட் பிரதர்ஸ் என்ற அமெரிக்க சகோதரர்கள் கண்டு பிடித்தார்கள்.



1839-ம் ஆண்டில் போட்டோ காமிராவை டால்பட் என்பவர் கண்டு பிடித்தார்.







ஒரு நீளமான வர்ணக் காகிதத்தை எடுத்துக் கொள். அதை, பக்கத்தில் காட்டியிருப்பதைப் போல் மடித்துக் கொள். அதன் மீது படம் 2-ல் உள்ளது போல ஒரு சிறு பெண் குழந்தையின் படத்தை வரை. பிறகு கத்தரியால் படம் 3-ஐப் போல் அதை வெட்டு. வெட்டின படத்தைப் பிரித்தால் கீழே இருப்பதைப் போல் பல பெண் குழந்தைகள் கை கோத்து நடனமாடுவதைப் பார்க்கலாம். பண்டிகை நாட்களில் இம்மாதிரி செய்து உங்கள் வீட்டை அலங்கரிக்கலாம்.



-பாபு-

# மூன்று சகோதரிகள்

ஸ்ரீ.நா.

## 3. இளவரசன் பிரயாணம்

எப்போதும் உற்சாகமாக இருக்கும் தங்கள் அருமைத் தங்கை அன்று மாத்திரம் ஏன் அப்படிக் கவலையுற்றிருக்கிருள் என்பது இளவரசர்களுக்கு விளங்கவில்லை. உடனே அவர்கள் தங்கள் தங்கையைப் பார்த்து, "சகோதரி, உன் கவலைக்குக் காரணம் என்ன? சொல்!" என்றனர். அதற்கு பாரிஜாதம் கிழவி கூறிய விவரங்களை இளவரசர்களிடம் கூறினாள். சகோதரர்கள் யோசித்தனர். உடனே இளவரசி "அண்ணன்மார்களே! என்ன யோசிக்கிறீர்கள்! இந்த அபூர்வ வஸ்துக்களைக் கொண்டு வர யாரை அனுப்பலாம், சொல்லுங்கள்! நம்முடைய சுக வாழ்வுக்கு இந்த அதிசய வஸ்துக்கள் மிகவும் அவசியம் என்று எனக்குத் தோன்றுகின்றது. இவை கிடைக்காவிட்டால் நான் திருப்தியுடன் வாழ முடியாது" என்ருள்.

சகோதரி கூறிய வரலாற்றை இளவரசர்கள் கேட்டு மிக்க கவலையில் ஆழ்ந்துவிட்டனர். அவற்றை எப்படியாவது கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்றும் முடிவு செய்தனர். அவ்விருவரும் சிறந்த வீரர்கள். ஆகையால் இந்த அபூர்வப் பொருள்களைக் கொண்டு வரத் தாங்களே செல்லுவதாகக் கூறினர். ஆனல் இளவரசியைத் தனியாக விட்டுவிட்டு எப்படிப் போவது என்று கவலைப் பட்டார்கள். கடைசியில் பெரியவனான பஹ்மான் மாத்திரம் தனியாகப் போவதென்றும், இரண்டாவது இளவரசன் பர்விஸ் தங்கை பாரிஜாதத்தைப் பாதுகாப்பது என்றும் திட்டம் செய்யப்பட்டது.

இரவெல்லாம் பிரயாணத்திற்கான ஏற்பாடு செய்தார்கள். பஹ்மான் குதிரைமீது ஏறும் சமயம் இளவரசி பாரிஜாதம், "அண்ணு, நீ புறப்பட வேண்டாம். இந்தப் பிரயாணத்தில் ஆபத்து ஏற்பட்டு உன் உயிர் போய் விட்டால் நான் என்ன செய்வேன்? அந்த மூன்று அதிசயப் பொருள்களும் இல்லாமற் போனாலும் போகிறது. உன்னை இழந்து நான் உயிருடன் இருக்க மாட்டேன்" என்று கண்ணும் கண்ணீருமாய் பஹ்மானை வேண்டிக் கொண்டாள்.



இதற்கு பஹ்மான் பதில் கூறினான்: "சகோதரி, என்ன நேர்ந்தாலும் நேரட்டும். நான் புறப்படுவதாகத் தீர்மானம் செய்துவிட்டேன். இனி என் முடிவை மாற்ற முடியாது. நீ கூறும் ஆபத்துக்கள் துரதிர்ஷ்டக்காரர்களுக்குத்தான் சம்பவிக்கும். எதற்கும் முன்னெச்சரிக்கையாக நான் உனக்கு ஒரு கத்தி கொடுக்

கிறேன். அதை வைத்துக் கொள். அந்தக் கத்தியை அடிக்கடி பார்த்து வா. அது இப்போது இருப்பது போலவே பளபளப்பா யிருந்தால் நான் உயிருடன் சௌக்கியமா யிருப்பதாக வைத்துக்கொள். ஆனால் அது துருப்பிடித்து அதில் ரத்தக் கறை தெரிந்தால் நான் இறந்து விட்டேன் என்று முடிவு செய்து கொள்.''



இதைச் சொல்லி விட்டு பிரகாசமான ஒரு கத்தியை எடுத்துத் தன் தங்கையிடம் கொடுத்தான். பிறகு தன் சகோதரி, சகோதரன் இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டு தன் பிரயாணத்தை ஆரம்பித்தான். இருபதாவது நாள் மாலை ரஸ்தாவில் ஒரு மரத்தடியில் பயங்கரத் தோற்றமுடைய ஒரு மனிதன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் தலை மயிர் பஞ்சு மாதிரி நரைத்திருந்தது. அவன் தாடி நீண்டு அவன் பாதத்தில் புரண்டு கொண்டிருந்தது. அவனுடைய நகங்கள் புலி நகங்கள் மாதிரி வளர்ந்திருந்தன. அவன் ஒரு பாயைத் தன் உடையாக அணிந்திருந்தான். தலையில் குடை மாதிரி ஒரு தொப்பி அணிந்திருந்தான். அவனைக் கேட்டு அதிசய வஸ்துக்களை அடையும் வழியை அறிந்து கொள்ள எண்ணினான் பஹ்மான்.

முதலில் துறவிக்கு வணக்கம் செலுத்தினான் பஹ்மான். அதற்கு அவன் கூறிய பதில் இளவரசனுக்குப் புரியவில்லை. அவன் பேசுவதை அவனுடைய அடர்ந்த மீசை தடுத்தது. எப்படியாவது துறவியுடன் பேசி, வழி தெரிந்து கொள்ள விரும்பினான் பஹ்மான். தன் குதிரையை அருகிலுள்ள மரத்தில் கட்டி விட்டு மீண்டும் துறவியிடம் வந்தான்.

"துறவியாரே, நீங்கள் கூறுவது என்னவென்று எனக்குப் புலப்படவில்லை. அதற்குக் காரணம் தங்கள் அடர்த்தியான மீசைதான். அந்த மீசையைச் சற்றுக் கத்தரித்து விட எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்றான் பஹ்மான்.

துறவி அதை அனுமதிப்பவன் போலத் தலையை ஆட்டினான். உடனே பஹ்மானும் துறவியின் மீசையைப் போதிய அளவுக்குக் கத்தரித்தான். கத்தரித்தவுடன் துறவி இளைஞன் மாதிரித் தோற்றமளிப்பதாக பஹ்மான் கூறினான். இதைக் கேட்ட துறவி சந்தோஷமடைந்து பஹ்மானைப் பார்த்து, "இளைஞனே! உனக்கு என்ன உதவி வேண்டுமோ அதை நான் செய்கிறேன்'' என்று கூறினான்.

உடனே பஹ்மான், "அறிவிற் சிறந்த பெரியோரே, மிகவும் சந்தோஷம். பேசும் பறவை, பாடும் மரம், மஞ்சள் நீர் இம்மூன்றும் எங்கு கிடைக்கும் என்று சொல்லுங்கள். அவை எனக்கு அவசியம் வேண்டும். அவற்றை அடைவதற்கு நீங்கள் வழி சொல்வீர்களானால் உங்களுக்கு நன்றியுடையவனாயிருப்பேன்'' என்றான்.



# சித்திராங்கன் விசித்திரம்

13

சித்திராங்கனுக்கு ஒரு அதிசயக் கரிக்கட்டி கிடைக்கிறது. அந்தக் கரிக்கட்டியால் அவன் சுவரில் எழுதிய சித்திரங்கள் உயிர் பெற்று வந்தன.



ஏழைப் பாராக்காரனை ஒரு தனவான் 'டிஸ்மிஸ்' செய்தார். உடனே சித்திராங்கன் ஒரு வேட்டை நாய்



எழுதி அவரிடம் கொடுத்தான். நாய் மணியார்டர்



கொண்டுவந்த தபால்காரரைக் கடித்துத் தூக்கி



காவல் வந்த திருடனுக்கு வால் ஆட்டி நின்றது.



பாராவிருக்க வந்த நாயின் சமர்த்தைப் பார்த்து விட்டு மீண்டும் பாராக்காரனையே வேலைக்கு வைத்துக்கொண்டு நாயையும் வீட்டையும் பாரா பார்க்கச் சொன்னார்.

இதைக் கேட்ட துறவி சற்றுக் கவலையடைந்தான். அதனால் சில நிமிஷங்கள்வரை அவன் பேச முடியவில்லை. நன்கு யோசித்துவிட்டுக் கடைசியாக பஹ்மானைப் பார்த்து கூறினான்:

"இந்த அபூர்வ வஸ்துக்களை அடைவதற்கு நீ எந்தப் பாதையில் செல்ல வேண்டும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதில் ஆபத்து ரொம்ப இருக்கிறது. இந்த முயற்சியில் நீ உயிர் தப்பி வருவது மிகவும் கஷ்டம். உன்மீது எனக்கு ரொம்பப் பிரியம் உண்டாகியிருப்பதால், இதில் நீ தலையிடலாகாது என்று உனக்குப் புத்திமதி கூறுகிறேன். பல இளைஞர்களுக்கு இந்த வஸ்துக்களை அடையும் வழி காட்டியிருக்கிறேன். ஆனால் அவர்கள் எல்லோரும் இறந்துபோய் விட்டார்கள். ஒருவர் கூடத் திரும்பி வரவில்லை. ஆகையால் இந்த வீண் முயற்சியில் நீ ஈடுபட வேண்டாம். தயவு செய்து வீட்டிற்குத் திரும்பிப்போ."

மனதைக் கலக்கும் இந்த விவரங்களை துறவி சொல்லக் கேட்டும் பஹ்மானின் உறுதி குன்றவில்லை. அந்த மூன்று அதிசய வஸ்துக்களையும் அடைந்தே தீருவது என்று தான் முடிவு செய்து விட்டதாகத் துறவியிடம் தெரிவித்தான். தான் எவ்வளவு சொல்லியும் இளவரசன் கேட்காததால் துறவி தன் பையிலிருந்து ஒரு கிண்ணத்தை எடுத்து பஹ்மான் கையில் கொடுத்து அவனிடம் கூறினான்: "என் வார்த்தைகளை நீ கேட்காததால் உன் இஷ்டப்படியே செய். நீ குதிரைமீது ஏறிக் கொண்டவுடன், நான் உன் கையில் கொடுத்த கிண்ணத்தை உன் முன்னால் எறி. அது வேகமாக உருண்டு கொண்டே போகும். அதைத் தொடர்ந்து போனால் ஒரு மலையடிவாரத்தில் அது நின்றுவிடும். அந்த மலைமீது ஏறிச்செல். அப்படி ஏறிச் செல்கையில் உன் இரு

றூம் பெரிய
ருப்புக் கற்களைக்
ாண்பாய். உன்
ாக் கண்டபடி
்டும் குரல்கள்
கட்கும். இவற்
றக் கேட்டு
யந்து விடாதே.
மலை ஏறுகையில்
ன்னல் திரும்பிப்
ார்க்க லாகாது.
ப்படிப் பார்த்
ால் கண் முன்
ாணும் கருப்புக்
ற்கள் மாதிரி நீயும் கல்லாக மாறி
டுவாய். உன்மாதிரி அசட்டுத் தைரி
த்துடன் சென்ற பல இளைஞர்கள்
ன் பேச்சைக் கேட்காததால் அம்
ாதிரிக் கருப்புக் கற்களாக மாறிவிட்
ார். இந்த ஆபத்துக்களையெல்லாம்
ாண்டி மலையுச்சிக்குப் போனால்
ங்கே ஒரு காட்டில் பேசும் பட்சி
ருப்பதைக் காண்பாய். பாடும் மர
ும் மஞ்சள் நீரும் எங்கே இருக்
ன்றன என்று அந்தப் பறவையிடம்

## ஒரு விடு கதை

சாதியிலே நான்கு உண்டு
சாதிக்கு ஒரு மன்னர் உண்டு—மக்களோ
பதினொருவர்; சண்டையிலே வெகுசமர்த்தர்;
ஒற்றுமையாய் ஒருவீட்டில் வாசம்செய்திடுவர்
அவர்கள் யார்?

ஜூலை 2-ம் தேதி இதழில் வெளி வந்த கணக்குக்கு விடை 36தான்; 32 என்று இருப்பது அச்சுப் பிழை.

**சென்ற வாரக் கணக்குக்கு விடை : 119**

கேட்டா யானால், அது அவை இருக்குமிடங்களைச் சொல்லும். நான்சொல்ல வேண்டியது இவ்வளவுதான். நான் கூறியபடி செய்து அபாயத்திற்கு உள்ளாகாமல் திரும்பிவா.''

துறவிக்கு வந்தனம் செலுத்திவிட்டு பஹ்மான் கிண்ணத்தைஎடுத்துக் கொண்டு குதிரைமீது ஏறிக் கொண்டு புறப்பட்டான். அந்தக் கிண்ணத்தை எறிந்தவுடன் அது வேகமாக உருண்டோடியது. பஹ்மான் தன் குதிரையைத் தட்டிவிட்டு அந்தக் கிண்ணத்தைத் தொடர்ந்துசென்றான். கடைசியாகத் துறவி சொன்ன மலையடிவாரத்தில் வந்து கிண்ணம் நின்றது. அங்கே வந்துசேர்ந்தபிறகுதான் துறவி கூறிய அபாயங்கள் உண்மை என்பதை உணர்ந்தான். (தொடரும்)

# ஒரே குறை

வெகு காலத்துக்கு முன்பு ஒரு
ாஜா இருந்தான். அந்த ராஜாவுக்கு
ரே ஒரு மகள் இருந்தாள். ராஜா
வளை வெகு அருமையாக வளர்த்து
ந்தான். குறித்த வயதை அடைந்
தும் அவளுக்குக் கல்யாணம் நடந்
து. கணவன் வீட்டுக்கு அவள் புறப்
ட்டபோது, தன் அருமைக் குமாரி
ங்கு எப்படி இருக்கப் போகிறளோ,
ன்னவோ என்று ராஜா வேதனைப்
ட்டான் புறப்படுவதற்குக் கொஞ்ச
நரத்துக்கு முன் அவன் தன் மகளை
ழைத்து, "என் அருமைக் குழந்
ாய், நீ சந்தோஷமாக இருக்கும்போ
தல்லாம் மங்களகரமான மஞ்சள்
டிதாசியில் கடிதம் எழுது.
னக்கு ஏதாவது கஷ்டமோ,
வலையோ உண்டானால்
வப்புக் கடிதாசியில் கடிதம்
ழுது" என்றான். "ஆகட்
ம், அப்பா!" என்று
சால்லி விட்டு அவள் புறப்
ட்டாள்.

பல மாதங்கள் கழிந்தன.
ாஜகுமாரியிட மிருந்து கடி



தமே வரவில்லை. அவள் எப்படி இருக்கிறளோ என்று ராஜா மிக்க கவலை அடைந்தான். கடைசியில், ஒருநாள் அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ராஜா அதை ஆவலாக உடைத்துப் பார்த்தான். சிவப்புக் கடிதாசியில் கடிதம் எழுதப்பட்டிருந்தது. அதைக் கண்டதும் ராஜா திடுக்கிட்டான். அவனுக்கு மூர்ச்சை உண்டாகி விடும் போல இருந்தது. ஒரு வகையாகச் சமாளித்துக் கொண்டு கடிதத்தைப் படித்தான். அதில் கீழ்க் கண்டபடி எழுதப்பட்டிருந்தது:

"அப்பாவுக்கு. அநேக வணக்கம். நான் இங்கே சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறேன். எல்லோரும் அன்பாக இருக்கிறார்கள். எனக்கு இங்கே ஒரே ஒரு குறையைத் தவிர வேறு எந்தக் குறையும் இல்லை. அந்த ஒரு குறை என்னவென்றால், இந்த ராஜ்யத்தில் சிவப்புக் கடிதாசியைத் தவிர வேறு கடிதாசியே கிடைக்கவில்லை."

# தியாகி



பி. எஸ். ராமையா

... இலாகா அஸிஸ்டெண்டு செக்ரடரி (உதவி மேலதிகாரி) சஞ்சண்டாராவுக்கு மூன்று நாளாக அதே தலைவலி. காரியாலயத்திற்கு வந்து ஒரு அரை மணி நேரம் தான் மற்ற வேலைகளைக் கவனிப்பார். அதுவும் அவசரமாகப் பைசல் ஆக வேண்டிய காகிதங்களாக இருந்தால்தான். அந்த அரை மணிக்குப் பிறகு மாலையில் வீட்டுக்குப் போகும் வரை அந்த ஒரே 'பைல்' கட்டைத்தான் புரட்டிக் கொண்டிருப்பார். மூன்று நாளாக அதே பைலுடன்தான் போராட்டம்.

அந்த இலாகாவில் அவருக்கு அடுத்தபடியாகக் கீழேயிருந்த ஒரு சூப்பிரண்டண்டு ராஜ்ய சர்க்கார் சேவையிலிருந்து மத்திய சர்க்கார் சேவைக்கு மாற்றப்பட்டு விட்டார். அடுத்த மூன்றாம் தேதி, அதாவது இன்னும் ஆறு நாட்களில் போகிறார். அவருக்கு பதில் நியமனம் ஆக வேண்டும்.

இந்த மாதிரி நிலைமைகளில் முன்பு சர்க்கார் இலாகாக்களில் எப்படி நியமனம் செய்து கொண்டிருந்தார்களோ என்னவோ, இப்போது அப்படி யெல்லாம் சுலபமாகச் செய்துவிட முடியாது. ஒரு நியமனத்திற்கு மேலதிகாரிக்கு ஒருவரைச் சிபாரிசு செய்யுமுன், நூற்றுக்கு மேற்பட்ட அம்சங்களைக் கவனித்தாக வேண்டும். ஒரு அம்சத்தில் குறை இருந்தாலும் போதும், இல்லாத தகராறெல்லாம் வந்து முளைக்கும்.

இதையெல்லாம் யோசித்துத்தான் சஞ்சண்டாராவ் அந்தப் பொறுப்பைத் தமக்கு மேலதிகாரியாய் உள்ளவரிடம் தட்டிக் கழிக்க முயற்சி செய்து பார்த்தார். ஆனால் அந்த மேலதிகாரி அதை சஞ்சண்டாராவிடமே வற்புறுத்திச் சுமத்தி விட்டார்.

அந்த இலாகாவிலேயே உள்ள மேல் வரிசைக் குமாஸ்தாக்களில் அனுபவமும், திறமையும் உள்ள யாரையாவது பொறுக்கிப் போட்டு விடலாமென்பதற்கும் இல்லை. வெளியிலிருந்து வந்துள்ள விண்ணப்பதாரிகள் மறைமுகமாகச் சுற்றி வளைத்துப் பல ரகங்களில் சிபாரிசுகள் கொண்டு வந்திருந்தார்கள். அதிலும் புதிய நியமனமானால், தேர்ந்தெடுக்கப் படுகிறவரின் இதர யோக்கியதாம்சங்களை மாத்திரம் கவனித்தால் போதாது. அவருடைய மதம், ஜாதி, குலம், கோத்திரம், படித்த கலாசாலை, சர்க்கார் போட்டிப் பரீட்சையில் இலாகா அவரைப் பற்றி எழுதியிருக்கும் தீர்ப்பு ஆகியவற்றை யெல்லாம் கவனிக்க வேண்டும். அவர் மூன்று நாளாகப் புரட்டும் அந்த பைலில் புதிய நியமன நபர்களின் காகிதங்கள் நூற்றுக் கணக்கில் இருந்தன. அந்த இலாகாவிலும் அக்கம் பக்கம் இலாகாக்களிலும் அந்த பதவிக்கு யோக்யதையுள்ளவர்களைப் பற்றிய காகிதங்கள் கிட்டத்தட்ட ஒரு நூறு இருந்தன. மூன்று நாளாக இந்தக் காகித வெள்ளத்திலே நிலை காண முடியாமல் கை ஓய, உடல் ஓய, மனம் ஓய நீந்திக் கொண்டிருந்தார்.

அன்று அவர் காரியாலயத்திற்கு வந்தவுடனேயே ஒரு சேவகன் மேலதிகாரியிடமிருந்து ஒரு துண்டுச் சீட்டுக் கொண்டு வந்து கொடுத்தான். "புதிய நியமன விஷயம் ஏன் இன்னும் முடிவாகவில்லை? இன்று மாலைக்குள் உத்திரவு போயாக வேண்டும்' என்று எழுதியிருந்தது அதில். "கடவுளே நீதான் வழி காட்ட வேண்டும்" என்று நினைத்துக் கொண்டே பைலைக் கையிலெடுத்தார். தலை சுழலுவது போல இருந்தது.

இலை மறைவு காய் மறைவாகக் கூடத் தவறு செய்ய இடம் கொடுக்காத மனச்சாட்சி அவருடையது. மற்றவர்களைக் கூடத் திருப்தி செய்து விடலாம். அதை மாத்திரம் சுலபமாகத் திருப்தி செய்துவிட முடியாது. ஒரு முடிவு செய்து விட்டு அதைப் பற்றி நாள் கணக்கில் வாரக்கணக்கில் தூங்காமல் சிந்திக்கச் செய்து விடும் தன்மையுடையது.

பைலைத் திறந்து முந்திய நாள் பார்த்து முடித்த இடத்திற்கு வைத்திருந்த அடையாளத்தைத் தேடிக் கண்டு பிடித்தார். அடுத்த நபரின் யோக்கியதாம்சங்களை அலசிப் பார்ப்பதில் முனைந்து விட்டார்.

அதிருப்தியுடன் ருள் கொட்டிக் கொண்டே காகிதங்களைப் புரட்டினார். பதினோராவது காகிதத்தின் மேலே இருந்த பெயரைப் படித்தவுடன் திடுக்கிட்டவர் போல நிமிர்ந்து உட்கார்ந்தார். "பி. டி. கோவிந்தராஜன் ... இலாகா மேல் வரிசை குமாஸ்தா" என்று அதில் எழுதியிருந்தது. "அடே! இந்த மனு எப்பொழுது வந்தது இது வரை நான் கவனிக்கவே யில்லையே

என்று எண்ணிக் கொண்டே அதைப் படிக்கத் தொடங்கினார்.

கோவிந்தராஜன் அந்த இலாகாவில் சேர்ந்து ஒன்பது வருஷங்களாகின்றன. இதுவரை அவன் மேல் ஒரு சிறு அதிருப்திப் புகார் கூடக் கிடையாது. மாற்றலாகிப் போகும் சூப்பிரண்டெண்டே அவனைப் பற்றியும் அவன் வேலைத் திறமை, குண மேன்மைகளைப் பற்றியும் பாராட்டி எழுதியிருக்கிறார் ஒரு தடவை. நியாயமாக அவனுக்கு உத்தியோக உயர்வு இதற்கு முன்பே கிடைத்திருக்க வேண்டும். ஆகையால் இப்போது ஏற்பட்டுள்ள சந்தர்ப்பத்தில் தன்னுடைய கட்சியை மேலதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்லியே இந்த மனுவை எழுதியிருக்கிறான்.

இவ்வளவையும் சொல்லி விட்டு கோவிந்தராஜன் தனக்குத்தான் அந்தப் பதவி கிடைக்க வேண்டுமென்பதற்கு இன்னும் இரண்டு முக்கியமான காரணங்களும் காட்டியிருந்தான். ஒன்று: அவன் அரசாங்கத்தாரால் 'பின் தங்கிய வகுப்பு' என்று ஒப்புக் கொள்ளப்பட்ட ஜாதியைச் சேர்ந்தவன். சர்க்கார் ஊழியத்தில் அந்த வகுப்பினரில் மொத்தம் ஏழு பேர்கள்தான் இருக்கிறார்கள், சென்னை ராஜ்யம் முழுவதிலும். அவர்களும் சாதாரணக் குமாஸ்தாக்கள்தாம். குறிப்பிட்டுக் காட்டக்கூடிய பெரிய பதவியில் ஒருவர் கூட இல்லை. இரண்டு: அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற, தேசம் நடத்திய போராட்டத்தில் அவனும் பங்கெடுத்துக் கொண்டவன். தேச விடுதலைத்தொண்டில் தியாகம் செய்து அடிவாங்கியவன். அந்தத் தழும்பு இன்னும் கூட அவன் முதுகிலிருக்கிறது. ஆகையால் மதிப்புக்குரிய மேலதிகாரிகள் அவன் விஷயத்தை அனுதாபத்துடன் கவனித்து, அந்தச் சந்தர்ப்பத்தை அவனுக்கே அவசியம் அளிக்கவேண்டும் என்று முடித்திருந்தான் மனுவை.

அதை முழுவதும் படித்துவிட்டு கஞ்சண்டாரால் 'அப்பாடா!' என்பது போலப் பெருமூச்செறிந்துகொண்டு நாற்காலியின் முதுகில் சாய்ந்தார். "இது சரியாகி விடும்போலிருக்கிறதே" என்று ஓடியது சிந்தனை. மனுவில் கூறப்பட்டிருந்த காரணங்களைத் தமது மனத் தராசில் எடை போட்டுப் பார்த்தார். ஒவ்வொரு அம்சமும் கிட்டத்தட்ட வேண்டிய அளவுக்கு வருவது போலிருந்தது.

"ஆனால் இலாகாவில் சேர்ந்து ஒன்பது வருஷம்தான் ஆகிறது. அவனைவிட அதிக காலம் சேவை செய்துள்ள 'சீனியர்'கள் இருக்கிறார்களே. யார், யார்?...ஒன்று, இரண்டு, மூன்று. அவர்கள் மூவருக்கும் சேவை அளவு அதிகம்தான். இருந்தாலும்...... இருந்தாலும்......"



கோவிந்தராஜன் சொல்லியிருந்த முக்கியமான இரண்டு காரணங்களையும் பற்றிக் கொண்டு ஓடியது சிந்தனை. குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்தவன் என்பது முக்கியமான ஒரு யோக்யதாம்சம்தான் என்பதை உடனே ஒப்புக்கொண்டு விட்டது அவர் மனம்.

இரண்டாவது முக்கியமான காரணம், தேசசேவை, தியாகம். அவருடைய மனம் கட்டவிழ்த்துக்கொண்டு ஓடியது. அடாடா! எத்தனை பேர், தேச விடுதலைக்காக எந்த மாதிரித் தியாகங்களெல்லாம் செய்திருக்கிறார்கள்! அடி, உதை, சிறைவாசம், பணநஷ்டம், சரீர சௌக்கியச் சேதம் ... அப்படிப்பட்ட தியாகிகளுக்கு, சந்தர்ப்பங்கள் சேரும்போது அவசியம் சலுகை காட்டித்தான் தீர வேண்டும். “சரி, கோவிந்தராஜனுக்குத்தான் தலை விழுந்தது. மற்றதெல்லாம் பூதான்” என்ற முடிவுக்கு வந்து நிமிர்ந்து உட்கார்ந்தார்.

பைலிலிருந்து அந்த மனுவைப் பிரித்தெடுத்தார். அதை இன்னொரு தடவை படித்துப் பார்த்தார். ஒரு கால் காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு எழுதத் தொடங்கினார். கோவிந்தராஜனுக்கு உத்தியோக உயர்வுச் சந்தர்ப்பமாக சூப்பிரண்டண்டு பதவியைக் கொடுத்து விடலாமென்று தாம் கருதுவதாக எழுதி முடித்தார். அவன் ஒரு ‘அரசியல் தியாகி’ என்ற விஷயத்தை தெளிவாகவும், பிரதானமாகப் படும்படியும் எழுதியிருந்தார்.

மேஜைமேல் இருந்த மணியை அடித்தார். டவாலிச் சேவகன் வந்தான். அவனிடம் அந்த இரண்டு காகிதங்களையும் கொடுத்து, ‘சூப்பிரண்டண்டு நியமன விஷயம்’ என்ற பைலில் வைத்துக் கட்டச் சொன்னார். கட்டி முடித்தவுடன் “இதை செக்ரட்டரியிடம் கொண்டு போ” என்று உத்திரவிட்டார். அவன் அந்த அறை வாயிற்கதவைத் தாண்டியபோது மறுபடி மணியை அடித்தார். சேவகன் திரும்பி வந்தான்.

கஞ்சண்டாராவ், “அதை இப்படி வை. நீ போய் பி. டி. கோவிந்தராஜனை வரச் சொல்லு” என்று உத்திரவிட்டார்.

சேவகன் பைலை வைத்துவிட்டு வெளியே போனான். ஐந்தே நிமிஷத்தில் கோவிந்தராஜன் அவர் அறைக்குள் நுழைந்தான்.

ஒரு பெரிய தியாகியை நேரில் பார்க்கிறோம் என்ற பூரிப்புடனும், அதனால் மலர்ந்த முகத்துடனும் கஞ்சண்டாராவ் “ஹலோ, கோவிந்தராஜன்! உட்காருங்கள்.
சூப்பிரண்டண்டு போஸ்டுக்கு நீங்கள் அ
பிளிகேஷன் போட்ட தகவலை என்னிட
ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா
மூன்று நாளாக அந்த பைலைப் புரட்டி
புரட்டிப் பைத்தியமே பிடித்துவிடு
போலாகி விட்டது. ஊம்...... நீங்கள் தே
சேவையில் அடிபட்ட தியாகி யென்பதை
தெரிந்து கொண்டேன். பலே!” என்று

வரும்போதே தன்னுடைய மனு சம்பந்
மாகத்தா னிருக்குமோ அழைத்தது என்
யோசித்துக்கொண்டே வந்த கோவிந்
ராஜனின் ஹிருதயம் துள்ளிக் குதிப்ப
போலிருந்தது. ராவின் குரலிலிருந்த உ
சாகமும் முகபாவமும் அதிர்ஷ்ட தேவை
அவனைக் கடைக்கண்ணால் பார்த்து வி
டாள் என்பதைத் தெளிவாக்கின.

பதிலே சொல்லாமல், மென்று மென்
விழுங்கிக் கொண்டு மௌனமாக அவ
உட்கார்ந்திருந்தான். கஞ்சண்டாராவ் உ
சாகம் குறையாமல் “உங்களுடைய மற்
யோக்யதாம்சங்களே போதுமானவையா
இருக்கலாம். என்னைப் பொறுத்த வரையி
நீங்கள் தியாகி என்ற ஒரே காரணத்தி
காகவே உங்கள் பெயரைச் சிபாரிசு செய்
விட்டேன். அநேகமாக அந்தப் பத
உங்களுக்குத்தான்” என்றார்.

கோவிந்தராஜன் நாக்குழற “தாங்
ஸார்!” என்றான். அந்த சந்தோஷச் செய்
யின் வேகத்தில் அவனால் பேசமுடியவில்லை
என்பதை உணர்ந்து கொண்டார் ராவ்.

“நீங்கள் தேச சேவையில் அடிபட்
தாக எழுதியிருக்கிறீர்களே, எந்த வருஷ
தில்? ஜெயிலுக்குப் போகவில்லையோ?
என்றார்.

“இல்லை ஸார்! 1930-31-ல் சென்னை
யில் வெளிநாட்டுத் துணிக்கடை மறிய
செய்தார்களே, அப்போதுதான் அடிப
டேன். அந்தத் தழும்பு இன்னும்கூட
முதுகில் இருக்கிறது” என்று சொல்லி
கொண்டே எழுந்து கோட்டைக் கழற்ற
தொடங்கினான் கோவிந்தராஜன்.

“வேண்டாம், பரவாயில்லை” என்
சொல்லத் துடித்தது ராவின் நாவு. அதை
யும் மீறி அந்தத் தியாகச் சின்னத்தை
காணும் ஆவல் எழுந்தது. பேசாம
உட்கார்ந்திருந்தார்.

கோவிந்தராஜன் கோட்டைக் கழற்
நாற்காலிமேல் போட்டு விட்டு, ஷர்ட்டை
முதுகின் புறத்தில் தூக்கிப் பிடித்து
கொண்டு திரும்பி, ராவிடம் முதுகை
காட்டினான். இடுப்புக்குமேலே குறுக்கா

நீளமாகக் கறுத்துத் தெரிந்த அந்த அடித் தழும்பைக் கண்ட ராவுக்கு மனதை என்னவோ செய்தது. "அடாடா! எப்படி அடித்திருக்கிறார்கள்! சரி, சட்டையை மாட்டிக் கொள்ளுங்கள்" என்றார்.

கோவிந்தராஜன் நிதானமாகக் கோட்டை எடுத்து மாட்டிக் கொண்டான். ராவ் மணியை யடித்தார். சேவகன் வந்தான். பைலை எடுத்துக்கொண்டு போக உத்திர விட்டார் ராவ்.

கோவிந்தராஜன் பைலைக் கடைக்கண்ணால் கவனித்தான். மேலாகத் தன்னுடைய மனுவும், அதனுடன் ஒரு கால் காகிதமும் இருப்பதைக் கண்டு விட்டான். பொங்கி யெழுந்த வெற்றிக் களிப்பை அடக்கிக் கொண்டு "நான் போகலாமா, ஸார்?" என்ற பாவனையில் ராவைப் பார்த்தான்.

ராவின் கண்கள் கலங்கி யிருந்தன. பேசியபோது குரல்கூட தழுதழுத்திருந்தது. "உட்காருங்கள். போகலாம். டாரால், எப்படிப் பட்டது அந்த அடி உங்களுக்கு? சொல்லுங்கள்" என்றார்.

* * *

கோவிந்தராஜன் மறுபடி நாற்காலியில் அமர்ந்தான். "அப்பொழுது எனக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயதிருக்கும். ராட்டன் பஜார் ஜவுளிக் கடைகளின் முன்னால் தொண்டர்கள் தினம் மறியல் செய்வார்கள். போலீஸ்காரர்கள் லாரிகளில் வந்து திமுதிமுவென்று இறங்குவார்கள். தொண்டர்களை நாயடிப்பதுபோல அடித்து, தெருவில் தரதரவென்று இழுத்து எறிவார்கள். அதைக் கண்டும் கேட்டும் நகரமே பரபரப்படைந்து துடித்தது. எனக்கு அதையெல்லாம் நேரில் போய் பார்க்கப் வேண்டுமென்று ரொம்ப ஆவல். ஆனால் என் தந்தை நான் அந்தப் பக்கமே போகக் கூடாதென்று உத்திரவு போட்டு விட்டார்.

"அவர் மகா கோபக்காரர். கோபத்தில் கண், தலை தெரியாமல் அடித்து விடுவார். அவருக்குப் போலீஸ் என்றாலே பயம். எனக்கு அவரிடம் பயம். அதனால் ஆவலை அடக்கிக் கொண்டு இருந்தேன். ஆனாலும் ஒரு நாள் அது என்னையும் மீறிவிட்டது. தந்தைக்குத் தெரியாமல் புறப்பட்டுப் போய் விட்டேன். நான் போனபோது தொண்டர்கள் அன்னிய ஜவுளிக் கடை வாசல்கள் முன் நின்று மறியல் செய்து கொண்டிருந்தார்கள். ஜனங்கள் எதிர்ச்சாரியில் கூட்டமாக வெய்யிலில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் போய்ச்



சேர்ந்த சற்று நேரத்தில் போலீஸ் லாரி வந்தது. மலையாளத்து ரிஸர்வ் போலீஸார் இறங்கி ஓடினார்கள். ஒரு அதிகாரி ஏதோ சொல்லிவிட்டு உத்தரவிட்டார். போலீஸ்காரர்கள் தொண்டர்களை மூர்க்கத்தனமாக அடிக்கத் தொடங்கிவிட்டார்கள். பயமோ என்னவோ, என் கை காலெல்லாம் வெடவெட வென்று ஆடின. மனம் பதைத்தது.

"தொண்டர்களை வேண்டிய மட்டும் அடித்து விட்டுப் போலீஸார் அவர்களைத் தள்ளிக்கொண்டு போனார்கள். ஒரே ஒரு தொண்டர் மட்டும் அவ்வளவு அடிபட்டும் பிடிவாதமாக அங்கிருந்து போக மறுத்துத் தெருவில் படுத்து விட்டார். இரண்டு போலீஸ்காரர்கள் அவரைக் காலைப் பிடித்துத் தார் ரோட்டில் இழுத்துக் கொண்டு போனார்கள். நான் வெறி பிடித்தவன் போல அவர்கள் பின்னால் ஓடினேன். தொண்டரை இழுத்துக்கொண்டு அவர்கள் பாய்க்கடைப் பக்கம் திரும்பினார்கள். அங்கே அவரை கடை மேடைமேல்கொண்டு போய்த் தள்ளிவிட்டுத் திரும்பினார்கள். தொண்டர் மறுபடி எழுந்து அவர்கள் பின்னாலேயே ராட்டன் பஜாரை நோக்கி நடந்தார். அவருடைய அந்தப் பிடிவாத தைரியத்தைக் கண்டு என் உடல் புல்லரித்தது. தொண்டர் இருபது கஜ தூரம் கூடப் போயிருக்க மாட்டார். எதிரில் வந்த ஒரு சார்ஜண்டு, போலீஸ்காரர்களை நிறுத்தி ஏதோ உத்தரவிட்டார். அவர்கள் திரும்பித் தொண்டரை வளைத்துக் கொண்டு தடிகளால் தாக்கினார்கள். தொண்டர் தள்ளாடிக் கீழே விழுந்து விட்டார். போலீஸ்காரர்கள் அவரை அங்கேயே விட்டுவிட்டுப் போய் விட்டார்கள்.

“நான் தொண்டர் விழுந்து கிடந்த இடத்திற்கு ஓடினேன். என் மனம் எப்படியோ இருந்தது. அவரைப் பரிதாபத்துடனும் வியப்புடனும் பார்த்துக் கொண்டு நின்றேன். அவர் கைக் கட்டைவிரலைக் காட்டி ‘தாகம், தண்ணீர்’ என்றார் ஈனஸ்வரத்தில். சுற்றிச் சுற்றிப் பார்த்தேன், எங்கே தண்ணீர் கிடைக்குமென்று. கொஞ்சதூரத்தில் ஒரு வெற்றிலை பாக்குக் கடை இருந்தது. ஒரு சோடா வாங்கி வரலாமென்று ஜேபியிலிருந்து ஒரு அணாவை எடுத்தேன். அதே சமயம் அந்த சார்ஜண்டு தொண்டரை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டு விட்டேன். என்னைப் பயம் பிடித்துக் கொண்டது. சட்டென்று தொண்டர் கையில் அந்த அணாவை வைத்து ‘சோடா சாப்பிடுங்கள்’ என்று சொல்லி விட்டு அங்கிருந்து ஓடினேன் — இல்லை, ஓட முயன்றேன். ஒரு முரட்டுக்கை என்னைப் பின்னாலிருந்து பிடித்துக் கொண்டதை உணர்ந்தேன். நடுங்கிக் கொண்டு திரும்பினேன். அந்த சார்ஜண்டு என் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு போனான். தெரு முனையில் நின்ற ஒரு ஜவானிடம் என்னை ஒப்புவித்து, ‘இவனை ஸ்டேஷனுக்குக் கொண்டு போ!’ என்று அதிகாரச் செருக்குடன் உத்திரவிட்டான்.

“நான் ‘கோ’வென்று அலறி அழுது விட்டேன். ஜவான் என்னை இழுத்துக் கொண்டு போய் ஸ்டேஷனில் சேர்த்தான். அங்கே இருந்த ஒரு சப் இன்ஸ்பெக்டர் என்னை நோக்கி, ‘யாரடா நீ?’ என்று அதட்டிக் கேட்டார். நான் அழுது கொண்டே ‘வேடிக்கை பார்க்க வந்தவன்’ என்றேன். அதற்குள் அந்த சார்ஜண்டே வந்து விட்டான். ‘வேடிக்கை பார்க்க வந்த நீ அவனுடன் என்ன பேசினாய்? அவன் கையில் எதற்காகக் காசு கொடுத்தாய்?’ என்றான். நான் சத்தியம் செய்து நடந்ததைச் சொன்னேன். ‘தொண்டர் தாகம் என்றார். சோடாவுக்கு ஒரு அணா கொடுத்தேன்’ என்றேன். ‘தாகமாயிருந்தால் சாகட்டும். அவனை யார் இங்கே வரச் சொன்னது? உன்னை யார் காசு கொடுக்கச் சொன்னது? ஸார்! இவனை ‘புக்’ பண்ணி லாக்கப்பில் தள்ளுங்கள். இது மாதிரி இரண்டொருத்தரையாவது மாட்டினால்தான் மற்றவர்களுக்கும் பயமிருக்கும்’ என்றான் சார்ஜண்டு சப் இன்ஸ்பெக்டரிடம். நான் சப் இன்ஸ்பெக்டர் காலில் விழவில்லை; அவ்வளவு தான், கை கூப்பிக் கொண்டு கெஞ்சினேன். ‘இனி மேல் இந்தப் பக்கமே வருவதில்லை, விட்டு விடுங்கள்’ என்று திருப்பித் திருப்பிச் சொன்னேன். சப் இன்ஸ்பெக்டர் என் பெயர் விலாசத்தை எல்லாம் கேட்டு எழுதிக் கொண்டார். நான் அழுது கொண்டேயிருந்தேன். என்னை ஒரு அறையில் தள்ளிப் பூட்டி விட்டார்கள்.

“சுமார் இரண்டு மணிநேரம் அங்கே இருந்திருப்பேன். திடீரென்று அங்கு என் தந்தையின் குரலைக் கேட்டு ‘அப்பா’ என்று அலறினேன். இரண்டொரு நிமிஷங்களில் அறையின் கதவைத் திறந்து என்னை வெளியே அழைத்துக்கொண்டு போனார்கள். சப் இன்ஸ்பெக்டர் முன்னால் என் தந்தை நின்று கொண்டிருந்தார். கைகூப்பி ‘இனிமேல் இப்படி வாராமே பார்த்துக்கறேனுங்க. இந்த ஒரு தடவை மாத்திரம் மன்னிப்புக் குடுத்து விட்டுடுங்க எஜமான்’ என்று கெஞ்சிக் கொண்டிருந்தார் அவர். சப் இன்ஸ்பெக்டர் ‘ஜாக்கிரதை! மறுபடி இந்த மாதிரி வந்தால், உன்னையும் சேர்த்து உள்ளே தள்ளி விடுவேன். கூட்டிக் கொண்டு போ’ என்றார். என் தந்தை என்னை வீட்டுக்கு அழைத்துச் சென்றார். வழி முழுவதும் அவர் பேசவே இல்லை. வீட்டுக்குள்ளே போனவுடன் என்னைக் கூடத்தில் நிற்க வைத்துப் பக்கத்திலிருந்த ஒரு பிரம்பை எடுத்து ‘இனிமேல் அந்தப் பக்கம் போகாதே’ என்று சொல்லி இடுப்பைச் சேர்த்து ஒரு இழுப்பு இழுத்து விட்டார். நான் ‘ஐயோ அம்மா! என்று அலறிக் கொண்டு கீழே விழுந்தேன். அந்த அடியின் தழும்புதான் இது” என்று சொல்லி விஷயத்தை முடித்தான்.

• • •

ஆரம்பமுதல் கட்டிலடங்காத ஆவலுடனும் வியப்புடனும் அவன் சொல்லி வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த நஞ்சுண்டராவின் முகம், கடைசியில் ஏன் அப்படி எட்டிக் காய் தின்றமாதிரி மாறி விட்டதென்று அவனுக்குப் புரியவில்லை.

நாற்காலியிலிருந்து எழுந்து “நான் என் ‘வீட்டு’க்குப் போகிறேன் ஸார்” என்றான் அவன்.

நஞ்சுண்டராவ் மௌனமாகத் தலையை ஆட்டினார். கோவிந்தராஜன் வெளியே போனான்.

ராவ் மனதில் அப்போது ஓடிய எண்ணத்தை இங்கே சொல்லுவது அவ்வளவு உசிதமாக இராது.






நளினி கிப்ஸ் டென்டிபிரிஸை விரும்புகிறாள். அவள் சிறுவயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறாள்.



காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸினால் தேய்க்கிறாள். மேலும் கீழுமாக, ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கமாக அல்ல.



அவள் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டிபிரிஸினால் தான்!

## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரை போல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புது மணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்

GD. 30-172 TM

# வீடு கிடைத்த விநோதம்

க. ரா.

இன்று நான் யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை, அந்த முகத்தில் என் ஆயுள் முழுதும் விழிக்க நான் விரும்பவில்லை. அவ்வளவுதான்! "ஏன், என்ன ஆபத்து? மணிபர்ஸ் போய்விட்டதா?" "மோட்டாரில் அகப்பட்டுக்கொள்ள இருந்தீரா?" "ஆபீஸில் மேல் உத்தியோகஸ்தரிடம் 'பாடம்' கேட்க நேர்ந்ததா?" "வீட்டில் ரேடியோ திடீரென்று மௌனமாகி விட்டதா?" அல்லது "மனைவி பேச ஆரம்பித்துப் புதுப் புடவைக்கு அடி போட ஆரம்பித்து விட்டாளா?" என்று நேயர்கள் அவரவர்களுக்குத் தோன்றின ஆபத்துக்களை நினைத்துக் கொண்டு கேட்பீர்களென்று எனக்குத் தெரியும். ஆனால் சமாசாரம் வேறு. என்னுடைய பால்ய நண்பன் பாலு யாராலும் சாதிக்க முடியாத கஷ்டமான காரியம் ஒன்றைச் சாதித்துத் தரும்படி என்னைக் கட்டாயப்படுத்தினான் இன்று. நானும் முதலில் எவ்வளவோ மறுத்தும், கடைசியில் "ஆகட்டும்" என்று ஒரு வார்த்தை சொல்லி விட்டேன். பாதி அவனுடைய உபத்திரவம் தாங்காமலும், பாதி அவனுடைய 'உன்னால் முடியாததும் உண்டா? நீ மனம் வைத்தால் எதுவும் நடக்கும்' என்பது போன்ற முகஸ்துதிக்கும் மயங்கி 'உம்' கொட்டி விட்டேன். அவன் அப்பொழுதே காரியம் முடிந்தது என்று கருதியோ என்னமோ, 'தாங்ஸ்' வேறு சொல்லி விட்டுப் போய் விட்டான்!

"அது என்ன சங்கடமான காரியம், ஐயா?" என்று கேட்கிறீர்கள். சங்கடமான, தர்மசங்கடமான, சிக்கலான, பிக்கலான வேலை அது! ஐந்து லட்சம் பேர்களே இருக்க வீடுகள் உள்ள, ஆனால் பதினைந்து லட்சம் பேர் இருக்கும் சென்னையில் ஒரு வீடு பார்த்துத் தருவது அப்படி என்ன சுலபமான காரியமா?

"சாப்பிட வாருங்கள், நாழியாகிறது! அப்படி எந்தக் கோட்டையைப் பிடிக்க யோசனை செய்து இப்படி உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?" என்றாள் என் மனைவி.

"கோட்டையைப் பிடிக்க அல்ல. வீட் ...க்கத்தான் யோசனை!" என்

...ஏக்குச் சாப்பாடும், ...கவில்லை. இருந்திகை, வைகுண்ட ஏகாதசி, சிவராத்திரி—எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து வந்த தினமாக அமைந்து போய்விட்டது!

* * *

பாலுவும் நானும் ஏ. பி. கற்றுக்கொள்ள ஆரம்பித்ததிலிருந்து பி. ஏ. வரை ஒன்றாகப் படித்தவர்கள். இணை பிரியாத தோழர்கள் என்றால் நாங்கள் தான் என்னும்படி பக்கத்துப் பக்கத்து 'டெஸ்கு'களில் உட்கார்ந்து, ஒன்றாகக் காப்பி அடித்து, ஒன்றாகப் பெஞ்சியின் மேல் ஏறி நின்று, கடைசியில் ஒன்றாக பி. ஏ. பாஸ் செய்தவர்கள். ஒரே ஹாஸ்டலில் ஒரே அறையில் படித்து ஒரே அறையில் தூங்கினவர்கள். ஆனால் ஒற்றுமை எல்லாம் பட்டம் வாங்கினதுடன் போய்விட்டது. நான் ஒரு பிரபல வக்கிலின் ஒரே பெண்ணை மணந்து அவர் வீட்டிலேயே தங்கி விட்டேன். (அவர் வீட்டிலேயே 'ஐக்யம்' ஆகிவிட்டேன் என்று சொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள்). நான் பி. எல். பாஸ் செய்து மாமனாரிடம் அப்ரெண்டிஸாக இருந்து, கடைசியில் அவருடைய கட்சிக்காரர்களை எல்லாம் ஸ்வீகரிக்கப் போவது அவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது?

பாவம், பாலு மாத்திரம் பி. ஏ. பாஸ் செய்தவுடன் சொந்த ஊருக்குப் போகும்படி யாகிவிட்டது. இரண்டு வருஷ காலம் கழித்து அவன் சென்னைக்கு வந்திருக்கிறான். ஒரு உத்தியோகமும் தேடிக் கொண்டு வந்திருக்கிறான். "டேய், ராமு! நீ எனக்கு உத்தியோகம்தான் பார்த்துத் தரவில்லை; வீடாவது பார்த்துக் கொடு!" என்கிறான். நண்பனைச் சந்தித்ததில் ஏற்பட்ட சந்தோஷம் வீடு என்ற வார்த்தையைக் கேட்டதும் வாடிப் போய்விட்டது. உத்தியோகமும், சொந்த வீடும் (மாமனார் வீடு என் வீடா?) இல்லாத நான் பாலுவுக்கு எப்படி உதவ முடியும்?

"பக்தா! என்ன வரம் வேண்டுமோ, கேள்!" என்று சொல்லிவிட்டுப் பக்தன் வரத்தைக் கேட்டவுடன் திரு திருவென்று விழிக்கும் பகவானைப் போல் நான் இருந்தேன். பாலு பக்தன் கேட்ட வீட்டை நான் அவனுக்கு அருள வேண்டும். பாலுவுக்கு என்னிடம் தேவதா விசுவாசம் அது பொய்யாகும்படி நான் விடலாமா?

மறு நாள் முதற்கொண்டு கையில் யாராவது சாம்பல் பூசனிக்காய் எடுத்துக் கொண்டு போவதைப் பார்த்தால் அந்த ஆளைப் பின் தொடர ஆரம்பித்தேன். அந்த ஆசாமி பழைய வீட்டில் நுழைந்தால் எனக்குச் சப்பென்று போய்விடும்.

புதிதாகக் கட்டின வீட்டுக்கு முன்னால் பூசனிக்காயைத் தொங்க விடுவார்களல்லவா? அப்படிப்பட்ட புது வீடு இந்தச் சென்னையில் எந்த எந்தச் சந்துகளில் கட்டப்பட்டிருக்கிறதோ, யார் கண்டது? கடைசியில் ஒரு நாள் ஒரு புது வீட்டைக் கண்டு பிடித்து விட்டேன். நான் வசிக்கும்—தப்பு — என் மாமனார் வசிக்கும் பேட்டையின் மறு கோடியில் வசதியான புது வீடு ஒன்று கட்டி முடிந்து கொண்டிருந்தது. வீட்டுக்காரர் குடியேறி விட்டார். வாடகைக்கு விட வேண்டிய ஒரு பக்கத்தில் மாத்திரம் பூச்சு வேலைகள் துரிதமாக நடந்து கொண்டிருந்தன.

வீட்டுக்காரர் ஒரு நிடையரான உத்தியோகஸ்தர் என்று விசாரித்து அறிந்து கொண்டேன். அக்கம் பக்கத்தில் புலன் விசாரித்துக் கடைசியில் நேரிலேயே ஒரு நாள் அவரைப் பேட்டி கண்டேன். பேட்டியின் முடிவில் வெளியான விஷயங்கள் சற்றும் உற்சாகம் அளிப்பவையாக இல்லை. தன் வீட்டில் ஒரு பக்கத்தை ஒழித்து வாடகைக்கு விட அவர் தயார் தானாம். ஆனால் அந்த இடத்துக்கு ஐம்பது ரூபாய் வாடகையும் ஆயிரம் ரூபாய் அட்வான்சும் அவர் கேட்டது தான் என்னை ஒரேயடியாகத் திகைக்க வைத்தது.

பாலு நூற்றைம்பது ரூபாய்க்குள் வரும்படி உள்ள உத்தியோகத்தை ஏற்றுக் கொள்ளப் போகிறான். அதில் ஐம்பது ரூபாய் வாடகை கொடுத்து விட்டால் மீதி ரூபாய் எதற்குப் போதும்? வாடகையாவது மாதச் சம்பளத்தில் கொடுத்து விடலாம். ஆனால் வீட்டுக்குள் காலடி எடுத்து வைப்பதற்கு முன் ஆயிரம் ரூபாய் அட்வான்சு கொடுக்க வேண்டுமாமே, அது எப்படி சாத்தியம்?

வீடு என்று ஒன்று கிடைக்காத கவலையை விட இப்பொழுது வீடு என்று ஒன்று கண்ணில் பட்டு அதைக் காப்பாற்றிக் கொள்ளும் கவலை அதிகம் என்பது தெரிந்தது. பரீட்சை பாஸ் பண்ணுவோமா என்ற கவலையை விடப் பரீட்சை பாஸ் செய்தவுடன் மேலும் படிக்கக் காலேஜில் அட்மிஷன் கிடைக்க வேண்டுமே என்ற கவலை அதிகம் என்பது போல!

வீட்டுக்காரரைப் பல விதங்களில் மன்றாடிக் கேட்டேன் — வாடகையை முப்பதாகவும் அட்வான்ஸை நூறாகவும் குறைக்க முடியுமா என்று. அவர் ஒரேயடியாக, "உங்களுக்கு அவ்வளவு பணம் கொடுக்க முடியாமல் இருக்கலாம், ஸார்! ஆனால் அவ்வளவு ரூபாய் கொடுத்து விட்டு வீட்டை எடுத்துக் கொள்ளுகிறவர்கள் வராமலா போய் விடுவார்கள்? நான் அவர்கள் வரும் வரை காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் போய்வாருங்கள்!" என்று கண்டிப்பான அன்புடன் விடை கொடுத்தார்!

* * *

சோர்ந்த மனத்துடன் வீட்டுக்குள் நுழைந்தேன். வாசல் பக்கத்து ஆபீஸ் அறையில் என்னுடைய மாமனார் தன்னுடைய கட்சிக்காரர்களுடன் கேஸ் ஒன்றைப் பற்றித் தீவிரமாக விவாதித்துக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. "பத்து சாட்சிகளைக் கொண்டு அவன் கெட்டவன், அயோக்கியன் என்று திருப்பித் திருப்பிச் சொல்லும்படி செய்தால் நீதிபதி நம்பத்தானே வேண்டும்? நீங்கள் பத்து சாட்சிகளைக் கொண்டு வாருங்கள்; நான் அவர்களைச் சரியாகத் தயார் பண்ணி விடுகிறேன். உங்கள் கேஸ் ஜயமடைந்த மாதிரிதான்!" என்று உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்த என்னுடைய மாமனாரின் குரல் என் காதுகளில் தெளிவாகக் கேட்டது.

அன்று முழுதும் அந்த வார்த்தைகள் என் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டே இருந்தன. அந்த வார்த்தைகளின் பொருள் என் மனதிற்குச் சிறிது சிறிதாகப் புலப்பட ஆரம்பித்தது. திடீரென்று என் மனதில் ஒரு யோசனை பளிச்சிட்டது.

மறுநாள் நண்பன் பாலுவுக்குக் கடிதம் எழுதினேன். என்னுடைய வீட்டுக்குக் கிட்டே ஒரு வீடு பார்த்திருப்பதாகவும் வாடகை ரூபாய் ஐம்பது, அட்வான்ஸ் ரூபாய் ஆயிரம் என்றும் அவனால் குறைந்த பட்சம் எவ்வளவு கொடுக்க முடியும் என்றும் கேட்டிருந்தேன். "மாதம் வாடகைக்காக ரூபாய் முப்பதும் அட்வான்ஸ் ரூபாய் நூறு அல்லது இருநூறு கொடுக்க முடியும் என்றும் அவன் பதில் எழுதி இருந்தான். "சரி, வீட்டைப் பேசி முடித்ததும் உனக்குக் கடிதம் எழுதுகிறேன்" என்று பதில் எழுதி விட்டேன்.



ஐம்பமாக 'வீட்டைப் பேசி முடித்ததும்' என்று எழுதினதை நடைமுறையில் கொண்டுவர முயற்சி செய்வது தான் நான் இப்பொழுது செய்ய வேண்டியது. அதை எப்படிச் செய்து முடிப்பது என்பதைப் பற்றி ஒரு விதமாகத் திட்டம் போட்டு வைத்திருந்தேன்.

என்னுடைய திட்டம் என்னவென்று என்னைக் கேட்கிறீர்கள். உங்களுக்குத் தெரிய வேண்டுமானால் அந்தப் புது வீட்டுக்குப் போய்ப் பாருங்கள்.

ஒருவர்:—ஸார்! வீட்டுக்காரர் இருக்கிறாரா?

வீட்டுக்காரர்:—வாருங்கள்; இன்னும் இரண்டே நாட்களில் வீடு தயார் ஆகிவிடும். இது தான் ஹால், இது சமையலறை......!

வந்தவர்:—அது சரிதான்; இடம் ஒன்றும் பிரமாதமானது இல்லையே! மேற்குப் பார்த்த வீடு. சரி, வாடகை என்ன என்று சொல்லவில்லையே?

வீட்டுக்காரர்:—நீங்கள் கேட்கவில்லையென்று பார்த்தேன். மாதா மாதம் ஐம்பது ரூபாய் வாடகையாகக் கொடுத்து விட வேண்டும். அட்வான்ஸாக ரூபாய் ஆயிரம். அவ்வளவுதான்!

வந்தவர்:— அவ்வளவுதானா! ஏதோ குறைச்சலாகக் கேட்டுவிட்டது போலப் பேசுகிறீர்களே! ஆயிரம் ரூபாய் யாரையா கொடுப்பார்கள், இந்த ஒரு சாண் இடத்திற்கு? வீடு புதிதாக இருக்கிறது என்பது தவிர இங்கே ஒரு சௌகரியமும் இல்லையே!

கிட்டத்தட்ட இதேமாதிரி அன்று மாலை வீட்டுக்காரருக்கும் வேறு ஒருவருக்கும் பேச்சு நடந்தது. மறுபடி திங்கள், செவ்வாய் என்று அடுத்த மூன்று நாட்களில் மேலும் ஐந்தாறு பேர் வந்து வீட்டுக்காரருடன் மேற்சொன்ன தோரணையில் சம்பாஷணை நடத்தினர்.

வியாழக்கிழமை காலையில் ஒருவர் வந்து வீட்டைப் பற்றின விவரங்களை விசாரித்தார்.

வந்தவர்:—இந்த வீட்டுக்கு என்ன ஸார், வாடகை? என்ன அட்வான்ஸ் கொடுக்கணும்?

வீட்டுக்காரர்:—மாத வாடகை நாற்பது ரூபாய் அட்வான்ஸ் ஐந்நூறு கொடுங்கள், போதும்.

வந்தவர்:—ஐந்நூறு ரூபாய்க்குக் கூட யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள், ஐயா! ஐந்நூறு ரூபாய் மாத்திரம் மரத்தில் செடியில் காய்க்கிறதா? வீடு ஒன்றும் அப்படிப் பிரமாதமாக இல்லையே? ஒரு அறை குகைபோல இருக்கிறது. மற்றொன்று கல்கத்தா இருட்டறை! காற்று என்ற பேச்சே கிடையாது!

வீட்டுக்காரர்:—ஓய்! உம்மை வீட்டு வர்ணனை செய்ய யாரும் கேட்கவில்லை. இஷ்டமானால் வாரும், இல்லாவிட்டால் நூறு பேர் காத்துக்கொண்டு இருக்கிறார்கள்.

வந்தவர்:—அது அந்தக் காலம், ஸார்! முன்போல வீடுகளுக்கு ஒன்றும் நெருக்கடி இல்லை. நீங்கள் பேப்பர் படிக்கிறது இல்லை போலிருக்கிறது. கொரியாவில் ரஷ்யாக்காரனும் அமெரிக்காக்காரனும் புகுந்து சண்டை போடறான்கள். மூன்றாவது உலக யுத்தம் வந்துவிட்டதன்னு எல்லோரும் பயப்படறா. மதராஸ் மறுபடி காலியானாலும் ஆய்விடும்...!

வீட்டுக்காரர்:—என்ன ஐயா, சும்மா அளந்துகொண்டே போகிறீர்! உமக்கு இஷ்டமில்லாவிட்டால் விட்டுத் தள்ளும்.

அடுத்த நான்கு தினங்கள் தினம் இருவர் வீதமாக வீட்டுக்காரரிடம் அவருடைய வீடு குகைபோல இருக்கிறது என்றும், மூன்றாவது உலக மகாயுத்தம் ஆரம்பமாகலாம் என்றும் சொல்லிப் போய்க் கொண்டிருந்தனர்!

நேயர்களுக்கு இருக்கும் சந்தேகம் எனக்குத் தெரியும். வீட்டுக்காரரிடம் யார் யாரோ பேசின விவரங்களெல்லாம் உமக்கு எப்படித் தெரியும் என்று கேட்கிறீர்கள். நான்தானே அவர்கள் எப்படிப் பேச வேண்டுமென்பதைச் சொல்லிக் கொடுத்தவன்! என்னுடைய மாமனாருக்கு வேண்டிய கட்சிக்காரர்கள் சுமார் ஏழெட்டுப் பேர்களைப் பிடித்துத் தயார் செய்து வீட்டுக்காரர்மேல் ஏவிவிட்டவன் நான்தான். என்னுடைய யுக்தி பலித்து விட்டது. அன்றே பாலுவுக்கு 'உடனே புறப்பட்டு வரவும்' என்று தந்தி கொடுத்தேன். அவன் மறுதினம் வந்தவுடன் வீட்டு விலாசத்தைக் கொடுத்து அனுப்பினேன். நானும் பின்னால் சென்று ஒட்டுக் கேட்ட சம்பாஷணை இதுதான்:

பாலு:—ஸார். இது உங்கள் வீடா? வாடகை எவ்வளவு? அட்வான்ஸ் உண்டா?

வீட்டுக்காரர்:—வாடகை ரூபாய் முப்பது. அட்வான்ஸ் என்று ஒன்றும் பிரமாதமில்லை. ஏதோ நூறோ இருநூறோ கொடுங்களேன். நல்ல மனுஷனா எனக்கு வேண்டும். அவ்வளவு தான் நான் விரும்புவது!

வீட்டுக்குப் பாலு குடி போனவுடன் அவனுக்கு வீடு கிடைக்க உதவி செய்த என்னுடைய மாமனாரின் கட்சிக்காரர்களுக்கும் எனக்கும் சம்பிரமமாக விருந்து நடத்தினான் என்று நான் சொல்லத் தேவையில்லை.



# 1½ அணா

# நோய், ஜலதோஷம்

## ஆகியவற்றை குணமாக்குகிறது




பிரதி தினமும் தொல்லை கொடுக்கும் ஜுரம், குளிர், நோய், நொடி ஆகியவற்றிலிருந்து எல்லோருக்கும் விடுதலை. கோடிக்கணக்கான மக்களுக்கு 'ஆஸ்ப்ரோ' என்பதின் அர்த்தம் இதுதான்— 'ஆஸ்ப்ரோ உங்களுக்கும் உதவட்டும். அது உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கட்டும். அது உங்களைப் பாதுகாக்கட்டும். உங்களுக்கு அருகாமையிலுள்ள மருந்து வியாபாரியிடம் நீங்கள் 'ஆஸ்ப்ரோ'வைப் பெறலாம். 8 மாத்திரைகள் 1½ அணாதான் அல்லது 30 மாத்திரைகள் கொண்ட பெரிய பாக்கெட் அணா 15. தலைவலி, நரம்பு வலி, ஜலதோஷம் ஏதாவது வந்தால் இரண்டு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் சாப்பிடுங்கள். சிறிது நேரத்திற்குள் வலி குறைந்து போகும்; ஜலதோஷம் மறையும்; நீங்கள் மறுபடியும் சுகமாக இருப்பீர்கள். நீங்கள் கஷ்டப்படவேண்டியதேயில்லை. ஏனெனில் 'ஆஸ்ப்ரோ' உங்களை கைவிடாது.

# 'ஆஸ்ப்ரோ'

## உங்களை கைவிடாது

'ஆஸ்ப்ரோ' அபாயமற்றது. குழந்தை கூட சாப்பிடலாம்.



கீழ்க்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கவும்:— தலைவலி, ஜலதோஷம், நரம்பு நோய், தொண்டைப்புண், வாதநோய், பல்வலி, தூக்கமின்மை, சூரிய வெப்பத்தால் ஏற்படும் கோளாறுகள்

**குடும்ப ஸைஸ்**
**30 மாத்திரை அணா 15**




ஒவ்வொரு 'ஆஸ்ப்ரோ' மாத்திரையும் சுகாதார முறையில் காற்றுப் புகவிடாமல் அடைத்து சீல் வைக்கப்பட்டுள்ளது. இதனால் அது எப்போதும் சுத்தமாகவும் புத்தம் புதிதாகவும் வைக்கப்பட்டுள்ளது



விரைவில் குணம் • அபாயமின்மை • பலனளிக்கும் தன்மை.

114TM




# இயற்கை

வெளியே இருள் சூழ்ந்தது; வீட்டுக்கு உரியவர்கள் விளக்கேற்றி வைத்தார்கள்.

விளக்கின் வெளிச்சத்தைக் கண்டதும் மூலை முடுக்குகளில் பதுங்கிக் கொண்டிருந்த கரப்பான் பூச்சிகளுக்கு உற்சாகம் தாங்க முடியவில்லை. 'ஜம்'மென்று அவை வெளியே கிளம்பி, 'ஜிவ்'வென்று பறக்க ஆரம்பித்தன.

இந்தக் கரப்பன்களை விட்டத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு கிழப் பல்லி பார்த்தது. அவற்றைப் பார்த்ததும் அதன் நாக்கில் நீர் ஊறிற்று. ஆனால் விரைந்து சென்று அவற்றில் ஒன்றைப் பிடித்துத் தின்னக்கூடிய சக்தி அதற்கு இல்லை. எனவே, அது தன் குட்டியைப் பார்த்து, "குழந்தாய்! பசி என் காதை அடைக்கிறது. நீ ஓடோடியும் சென்று அந்தக் கரப்பன்களில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு வந்து தருகிறாயா?" என்று கேட்டது.



"ஆகட்டும், அம்மா!" என்று சொல்லிக் கொண்டே, குட்டி பல்லி விரைந்து சென்றது. அதே சமயத்தில் ஒரு கரப்பன் பூச்சி பறந்து இளைத்த அலுப்பைத் தீர்த்துக் கொள்வதற்காகச் சுவரின் மேல் உட்கார்ந்தது.

அதுதான் சரியான சமயம் என்று எண்ணிக் குட்டி பல்லி அதற்குப் பின்னால் மெல்ல நகர்ந்து சென்றது.

'டபக்!'

அவ்வளவுதான்; பல்லியின் வாயில் கரப்பன் சிக்கிக் கொண்டு விட்டது!

"நன்றி!" என்றது கரப்பன்.

"யாருக்கு?" என்று கேட்டது பல்லி.

"கடவுளுக்கு!"

"கடவுளுக்கா! எதற்காக?"

"உன்னைப்போல் கரப்பனைக் கொன்று தின்னும் பல்லியாக என்னைப் படைக்காமல், பல்லி கொன்று தின்னும் கரப்பனாக என்னைப் படைத்தாரே, அதற்காகத்தான்!"

இதைக் கேட்டதும் பல்லியின் மனம் உருகிவிட்டது. உடனே, அந்தக் கரப்பனைத் தன் பிடியிலிருந்து விட்டுவிடலாமா என்றுகூட அது ஒருகணம் யோசித்தது. மறுகணம் எதற்கும் தாயாரிடம் சென்று இந்த விஷயத்தைச் சொல்லிப் பார்ப்போம் என்று எண்ணி, அது வாயில் கரப்பனுடன் கிழப் பல்லியை நோக்கி விரைந்து சென்றது.



அங்கே, அது கண்ட காட்சி அதைத் திடுக்கிட வைத்தது!

எங்கிருந்தோ பூனை யொன்று வந்து கிழப் பல்லியைக் கௌவிக் கொண்டிருந்தது. அந்தப் பூனையிடம் தாய்ப் பல்லி பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தது:

"உன்னைப் போல் பல்லியைக் கொன்று தின்னும் பூனையாக என்னைப் படைக்காமல், பூனை கொன்று தின்னும் பல்லியாக என்னைப் படைத்தாரே, அந்தக் கடவுளுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்!"

இந்த வார்த்தை காதில் விழுந்ததுதான் தாமதம்; பல்லிக் குட்டியின் வாயிலிருந்த கரப்பன், அதன் வயிற்றுக்குள் போயே போய்விட்டது! —விந்தன்

# மலர்ந்த மனம்

வி. எஸ். ஆர்.

கிராமத்தில் பிறந்து வளர்ந்த இந்திராணி கல்யாணமாகிப் பட்டணத்தில் இருந்த கணவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். அவள் புருஷன் மதனகோபால் ஒற்றவாடைத் தெருவில் ஒரு பூக்கடை வைத்திருந்தான். சாதாரணப் பூக்கடை அல்ல; காகிதத்தினாலும் கெட்டியினாலும் ரோஜாப் பூ, மல்லிகைப் பூ முதலியன செய்து விற்று வந்தான். பூக் கிடைக்காத காலங்களில் மதன கோபாலின் சரக்குக்குக் கிராக்கி ஏற்படுவது உண்டு. மல்லிகைப்பூ என்று சொல்லி அவன் கொடுப்பது பெரிய நெரிஞ்சி முள்ளைப் போல் இருக்கும். ரோஜாப்பூ என்று சொல்லி அவன் கொடுக்கும் வஸ்து கடவுள் சிருஷ்டியையே கேலி செய்வதுபோல் இருக்கும். இருந்தாலும் என்ன செய்வது? அலங்காரம் செய்வதற்குப் பூ தேவையானவர்கள் அதை வாங்கித்தான் போவார்கள்.

கிராமத்தில் இந்திராணியின் வீட்டுப் பின்புறத்தில் அழகான பூந்தோட்டம் இருந்தது. சிறு குழந்தைப் பருவத்திலிருந்தே இந்திராணி தன் சின்னஞ் சிறு குஞ்சுக் கைகளினால் சிறிய பாத்திரத்தில் ஜலம் எடுத்துப் பூஞ்செடிகளுக்கு ஊற்றுவாள். தோட்டத்தில் இருந்த விதம் விதமான புஷ்பங்களை எடுத்து அவள் தாயார் குழந்தைக்குச் சூட்டி விடுவாள். இளம் பருவத்தை எட்டிப் பிடிக்கத் தொடங்கியபோது, காலை மாலை இரு வேளைகளிலும் அவள் பூத் தொடுத்துக் கொண்டிருப்பாள். இவ்வாறு பூக்களிடையில் பிறந்து வளர்ந்த இந்திராணிக்குப் பட்டணம் வந்ததும் பெரிய அதிர்ச்சி காத்திருந்தது.

தன் கணவன் ஒரு வியாபாரி என்று கேள்விப்பட்டிருந்தாளே தவிர, கெட்டிப்பூ வியாபாரி என்பது சென்னைக்கு வந்ததும் தான் தெரிந்தது. அதுவரை அவள் கெட்டிப் பூவையோ, காகிதப் பூவையோ பார்த்ததுமில்லை, கேள்விப் பட்டதுகூட இல்லை. கெட்டியினால் போலிப் பூ செய்து விற்பார்களா? இதுவும் ஒரு தொழிலா, இதையும் வாங்குகிறவர்கள் உண்டா என்று எண்ணி எண்ணி ஆச்சரியப் பட்டாள். பூக்கள் கிடைக்காத சமயங்களில் கோவில் அலங்காரம் செய்யவும், கல்யாண காலங்களில் பந்தல்கள் அலங்காரம் செய்யவும், சினிமாக்களிலும் நாடகங்களிலும் கெட்டிப் பூவை உபயோகிப்பது உண்டு என்று அறிந்து திகைத்துப் போனாள்.

இந்திராணி சென்னைக்கு வந்த அன்று இரவு மதனகோபால் கெட்டியால் செய்த அடுக்கு மல்லிகைச் சரம் ஒன்று கொண்டு வந்து மனைவியிடம் கொடுத்தான். தலைக் கொண்டையின்மீது வைத்துக் கொள்ளும் படி பிறைச் சந்திரன் வடிவில் அது வளைவாகச் செய்யப்பட்டிருந்தது. "இது என்ன?" என்று கேட்டாள் இந்திராணி. சமீபத்தில் அவள் தகப்பனார் வெளியூரிலிருந்து வாங்கிக் கொண்டு வந்த எலிப் பொறியின் பல் வரிசையை அது ஞாபகப்படுத்தியது.

"மல்லிகையை இரண்டு அடுக்காக பூ கட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். கெட்டியால் செய்திருந்தாலும் நிஜ மல்லிகையைப் போலவே இருக்கிறது பார்த்தாயா?" என்றான் மதனகோபால் உற்சாகத்துடன்.

கணவன் முகத்தில் தோன்றிய அளவற்ற அன்பை இந்திராணி கவனித்துத் தலை குனிந்தாள்.

"இதோ, நானே உன் தலையில் சூட்டி விடுகிறேன்" என்று கூறி அவள் தலையில் சூட்டப் போனான்.

சங்கோஜத்தினால் அவள் கை பின்னே கொண்டையை நோக்கிச் சென்றது. கெட்டிப் பூவாக இருந்த போதிலும் அதன் கூரிய முனைகளில் ஒன்று அவள் மெல்லிய கையில் குத்திவிட்டது.

"உஸ்!" என்றாள் இந்திராணி.

"என்ன?" என்று கூறித் திடுக்கிட்டான் மதனகோபால். அதற்குள் அவள் விரலில் ஒரு சிறு ரத்தப் புள்ளியை அவன் பார்த்து விட்டான்.

"சே, சே! என்ன காரியம் செய்தேன்? இனிமேல் பூவை மிருதுவாகச் செய்ய வேண்டும். என் வேலையில் இனிமேல் கவனம் செலுத்த வேண்டும். நான் கஷ்டப்பட்டு நல்ல பூவாகத் தயாரிக்க வேண்டும்" என்றான்.

"நீங்கள் ஒரு கஷ்டமும் படவேண்டாம். அரை அணா கொடுத்துக் கடையில் நல்ல மல்லிகைப் பூ வாங்கி வாருங்கள்!" என்று சொல்ல நினைத்தாள் இந்திராணி. ஆனால் அவள் புத்திசாலி. கணவன் தொழிலை



சிந்திக்கும்படியோ, அவன் மனத்தைப் புண்ணாக்கும்படியோ எதுவும் சொல்ல அவள் விரும்பவில்லை. கண்ணியமுள்ள குடும்பத்தில் பிறந்து வளர்ந்த அவள் கணவன் இஷ்டப்படியே கெட்டிப் பூவை வைத்துக் கொள்ளத் தீர்மானித்தாள்.

மறு நாள் மதனகோபால் வரும்போது ஒரு பொட்டணத்தை அவளிடம் கொடுத்தான். இந்திராணி அதை ஆவலுடன் பிரித்துப் பார்த்தாள். உள்ளே இருந்தது காகிதத்தால் செய்த கனகாம்பரம். "நீங்கள் என்ன பூவைக் கொண்டு வந்து கொடுத்தாலும் வைத்துக் கொள்கிறேன். அந்தப் பூவின் பெயரை மட்டும் என்னவென்று முதலில் என்னிடம் சொல்லிவிடுங்கள்" என்று கேட்டுக் கொண்டாள். மதனகோபால் கடகடவென்று சிரித்தான். "அப்படியானால் பெயரைச் சொல்லித் தான் தெரிந்து கொள்ள வேண்டும் போலிருக்கிறது. என் திறமைக்குச் சரியான 'சர்டிபிகேட்' இது!" என்று கூறி அவன் மேலும் சிரித்தான்.

"பார், பார்! இன்னும் கொஞ்ச நாளில் நீயே ஆச்சரியப்படும்படி கெட்டிப்பூ செய்யாவிட்டால் என் பெயரை மாற்றி வைத்துக் கொள்கிறேன்!" என்றான் மதனகோபால்.

★

ஒரு நாள் இந்திராணி கோவிலுக்குச் சென்றாள். வாசலில் நிறையப் பூக்கடைகள் இருந்தன. வெளியிலிருந்து வந்த ஒரு மாதத்துக்குப் பிறகு அன்று தான் அவள் வெளியில் வந்து நிஜப் பூவைப் பார்த்தாள். பூக்களைப் பார்த்த இந்திராணி அப்படியே மதி மயங்கி நின்று விட்டாள். அங்கிருந்த பல வர்ணப் பூக்கள்—ரோஜா, மல்லிகை, ஜவந்தி, தாமரை, சண்பகம் முதலிய மலர்கள் அவள் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தன. அவற்றின் நறுமணம் அவளை ஆகர்ஷித்து இழுத்தது. மெய் மறந்து முன்னே ஓடி மல்லிகைக் குவியல் ஒன்றைக் கையில் அள்ளி முகர்ந்தாள்.

"என்ன அம்மா, பூ வேண்டுமா?" என்றாள் பூக்காரி.

"ஆமாம் ......" என்று சொன்ன இந்திராணி சட்டென்று தயங்கி நின்றாள். அப்படியே ஒரு கடைப் பூவையும் வாங்கிப் போய் சுவாமிக்கும் சாத்தித் தானும் ஆசை தீர வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை திடீரென்று மறைந்தது.

"அவர் ஆசைப்பட்டுத் தன் கையினால் சிரத்தையுடன் செய்து கொண்டு வரும் பூவைவிட இது உயர்வா? இதை வைத்துக் கொண்டால் என்ன நினைப்பார் அவர்?" என்ற சந்தேகமும் பயமும் வந்து விட்டது. அப்படியே பூவைக் கீழே போட்டுவிட்டு, கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து விட்டுத் திரும்பினாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் வீட்டுக்கு வந்த மதனகோபால், "இன்றைக்கு நீயே திகைத்துப் போகப் போகிறாய்!" என்று சொல்லிப் பொட்டணத்தை அவளிடம் கொடுத்தான். அதைப் பிரிக்கும்போதே ரோஜாவின் வாசனை கம்மென்று கமழ்ந்தது. என்ன அதிசயம்! நிஜமாகவே அவள் கையில் ரோஜா மலர்கள் இருந்தன. இதழ்களைத் தடவிப் பார்த்தாள் இந்திராணி. அதன் மென்மையை ஸ்பரிசித்துப் புளகாங்கிதம் அடைந்தாள். தன் குறையை உணர்ந்து நிஜமாகவே ரோஜாப்பூ வாங்கி வந்த கணவனின் அன்பை நினைத்ததும் அவள் கண்களில் நீர் அரும்பியது. என்ன சொல்வதென்று தெரியாமல் வாயடைத்து நின்றாள்.

"பூ எப்படி?" என்று கேட்டான் மதனகோபால்.

"என்றைக்குமில்லாதபடி இன்று மட்டும் என் நிஜப் பூ வாங்கி வந்தீர்கள்?"

"இது நிஜப் பூ அல்ல; செட்டிப் பூவே தான்! ஸ்திரீகளைச் சுலபமாக ஏமாற்றி விடலாம் என்பதற்கு இதுவே உதாரணம்!" என்று கூறிச் சிரித்தான் மதனகோபால்.

"என்ன!" என்று ஆச்சரியத்தால் கூவினாள் இந்திராணி. அவள் கையிலிருந்த பொட்டணம் கீழே விழாதது ஆச்சரியம்தான்!

"செட்டியைப் புதுமுறையில் சிவிச் சாயம் ஏற்றி யிருக்கிறேன். அதனால்தான் இதழ்கள் நிஜ ரோஜா இதழ்களைப் போலிருக்கின்றன."

"வாசனை?"

"ரோஜா வாசனை எஸ்ஸென்ஸை இதில் தெளித்திருக்கிறேன்; வேறொன்றுமில்லை."

"நிஜரோஜா என்று ஏமாந்து விட்டேன்."

"இது நான் சிருஷ்டித்த ரோஜாவே தான். என் கலைத் திறமையைப் பார்த்து உனக்கு ஏற்பட்ட பெருமையினால் சற்று முன் உன் கண்கள் கலங்கி விட்டன. அப்பொழுது எனக்கு எவ்வளவு ஆனந்தமாயிருந்தது தெரியுமா?" என்று கூறி, அம் மலர்களை அவள் தலையில் வழக்கம் போல் சூட்டினான்.

தேள் கொட்டிய திருடன்போல் வேதனையையும் ஏமாற்றத்தையும் மறைத்துக் கொண்டு மௌனமாக நின்றாள் இந்திராணி. அந்தப் பூவிலிருந்து ரோஜாவின் வாசனை வெகு நேரம் கமழ்ந்து கொண்டிருந்த போதிலும், அவள் மனதில் நிஜ ரோஜா அளிக்கக் கூடிய மகிழ்ச்சி ஏற்படவில்லை. ஆனால் இது அவள் கணவனுக்கு எப்படித் தெரியும்?

மதனகோபால் மனைவியிடம் உயிரையே வைத்திருந்தான். அவள் விதம் விதமாகக் கூந்தலை அலங்கரித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகப் பலவிதப் பாணிகளில் பூக்களைக் கட்டினான். ஆரம்பத்தில் மோசமாகப் பூக்களைச் செய்தது போக, இப்பொழுது மனைவியைக் குதூகலப்படுத்த அற்புதமான அழகிய பூக்கள் செய்தான். அந்தமாதிரி 'பாஷன்'களைக் கடையிலும் விற்கத் தொடங்கினான். அவன் பூக்களுக்கு மவுசு ஏற்பட்டது. அந்த மலர்களின் வர்ணத்தையும், அமைப்பையும் பார்த்து ஜனங்கள் மதி மயங்கினர். அவன் தொழிற் சாலை வளர்ந்தது. நாலு பக்கங்களிலிருந்தும் 'ஆர்டர்'கள் வந்து குவிந்தன. பல கண் காட்சிகளில் மதனகோபாலின் பூக்கடை இடம் பெற்றது. அவன் பங்களா, மோட்டார் எல்லாம் வாங்கிவிட்டான்.

ஒரு கண்காட்சிச் சாலையைத் திறந்து வைத்த பிரமுகர் அதிலுள்ள மதனகோபாலின் பூக்கடையைப் பார்த்துவிட்டுப் பாராட்டியது பத்திரிகையில் வெளி வந்தது. "மதன கோபாலன் சிருஷ்டித்த பூக்கள் கடவுளின் சிருஷ்டியையும் மிஞ்சிவிட்டன. அவை வெறும் வர்த்தக சாமான் அல்ல; கலாசிருஷ்டி!" என்று அவர் சொல்லியிருந்ததை அவன் மனைவியிடம் படித்துக் காட்டினான்.

"கடவுளை யாராவது மிஞ்ச முடியுமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் இந்திராணி.

"கடவுள் செய்த ரோஜாப் பூவை விட என் ரோஜாப் பூ இன்னும் அதிகச் செவப்பாக இருக்கிறது என்று பிரமுகர் சொல்கிறார்! வேறொன்றுமில்லை!" என்று தமாஷ் செய்தான் மதனகோபால்.

"ஆரம்பத்தில் புஷ்பங்கள் செய்து மற்றவர்களுக்கு வழி காட்டிய கடவுளை என் ஒருவரும் பாராட்ட மாட்டேன் என்கிறார்கள்?"

மனைவியின் புத்திசாலித் தனத்தைக் கண்டு ஒரு கணம் திகைத்தான் மதனகோபால். மறுகணம், "எப்பொழுதுமே இந்த மக்கு ஜனங்கள் கடவுளைப் பாராட்டுவதில்லை. கடவுள் செய்வதுபோல் யாராவது 'காப்பி' அடித்தால் அவனைப் பிரமாதமாகப் புகழுவார்கள்" என்றான்.



கணவன் அவ்வப்பொழுது கொண்டு வந்து கொடுத்த செயற்கைப் பூக்களை முகம்





ஜெயில் விஸிட்டர் :— உனக்குக் குறை ஏதேனும் இருந்தால் சொல்!

கைதி :— என்னை உள்ளேயே அடைத்துப் போட்டு விட்டார்களே? வெளியில் போய்த் திருட முடியவில்லையே என்பதுதான் என் குறை!

---

கவனித்துக் கொள்ளாமல் இந்திராணி சமைத்து கொண்டிருந்தாள். ஆனால் ஒரு ஏக்கம் அவள் மனதை வாட்டிக் கொண்டிருந்தது. நிஜப் பூக்களைக் கண்ணால் காண முடியாதா என்று அவள் ஏங்கினாள்.

ஒரு நாள் இந்திய சர்க்காரிடமிருந்து மதனகோபாலனுக்கு ஒரு தந்தி வந்தது.

"வியன்னாவில் நடந்த சர்வதேசக் கண்காட்சியில் இந்தியப் பகுதியில் வைக்கப்பட்டிருந்த தங்கள் சிருஷ்டியான மலர்களுக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டிருக்கிறது. தங்கள் சிருஷ்டியில் கலைத் திறமை உச்சியைத் தொட்டுவிட்டதாகக் கண்காட்சிக் கமிட்டியார் அபிப்பிராயப் படுகிறார்கள்."

தந்தியை மட்டற்ற பெருமையுடன் மதனகோபால் மனைவியிடம் படித்துக் காட்டினான்.

"இந்திரா! இவ்வளவு பெருமைக்கும் புகழுக்கும் யார் காரணம், தெரியுமா? நீதான்! ஆரம்பத்தில் ஏதோ வயிற்றுப் பிழைப்புக்காக வெட்டிப் பூக்களும் காகிதப் பூக்களும் செய்து வந்தேன். நீ வந்ததும்தான் உன்னை மகிழ்விக்க வேண்டுமென்பதற்காகப் பூக்களை அழகாகச் செய்ய வேண்டுமென்ற சிரத்தை ஏற்பட்டது. ஒவ்வொரு பூவையும் செய்து உன் தலையில் வைத்துப் பார்த்த பொழுது எனக்கு ஏற்பட்ட உற்சாகம் கொஞ்சமா, நஞ்சமா? அந்த உற்சாகத்தினால்தான் மேலும் நல்ல பூக்கள் செய்ய முடிந்தது. இந்தப் பெருமைக்கு நீதான் காரணம்" என்றான்.

"நான்தான் காரணமா?" என்று அடி மாட்டாமல் சிரித்தாள் இந்திராணி.

அன்று சாயங்காலம் சீக்கிரமாகவே வீட்டுக்கு வந்து விட்டான் மதனகோபால். இந்திராணி பின் கட்டில் இருந்தபடியால் கணவன் காரில் வந்து இறங்கியதைக் கவனிக்கவில்லை. உள்ளே வந்த கணவன் பின் கட்டில் ஏதோ பேச்சுச் சத்தத்தைக் கேட்டு உற்றுக் கவனித்தான்.

"ஆஹா! ரோஜாப் பூ பெரிதாக இருக்கிறதே! நாளைக்குக் கட்டாயம் இருவாட்சி கொண்டு வா!" என்றாள் இந்திராணி.

"கொண்டு வருகிறேன், அம்மா!"

இது பூக்காரியின் குரல்.

"நாளைக்குக் கொஞ்சம் சீக்கிரமே வந்துவிடு!"

"ஆகட்டும்" என்று சொல்லிவிட்டுப் பூக்காரி வெளியில் செல்லும் சத்தம் கேட்டது.

ஸ்தம்பித்து நின்று விட்டான் மதனகோபாலன். வழக்கம் போல் அவன் கொண்டு வந்த பொட்டணம் கீழே நழுவி விழுந்தது. எதிரே வந்த இந்திராணியும் கணவனைப் பார்த்துத் திடுக்கிட்டு நின்றாள். அவள் கையில் இருந்த பூக்கூடையும் கீழே விழுந்தது. அதிலிருந்த பூக்கள் செயற்கைப் பூக்களுடன் ஒன்று கலந்தன.

"ரோஜாப் பூவா வாங்கினாய்?" என்றான் மதனகோபாலன். அவன் குரலில் கோபத்துடன் வேதனையும் தொனித்தது.

இந்திராணிக்கு அழுகை பீறிக்கொண்டு வந்தது.

"ஆமாம். நிஜப் பூ வாங்கி வைத்துக் கொள்ளாவிட்டால் பித்துப் பிடித்துவிடும் போலிருந்தது. இரண்டு வருஷ காலமாக நிஜப் பூவுக்காக நான் ஏங்கிப் போனேன். நீங்கள் எவ்வளவோ அழகாகத்தான் பூக்கள் செய்கிறீர்கள். உங்கள் பூ வாடுவதில்லைதான்; உங்கள் சாமர்த்தியத்தில் எனக்கும் பெருமைதான். ஆனால் கடவுள் சிருஷ்டித்த அழகிய பூக்கள் இல்லாமல் என் மனம் வாடி விடுகிறதே! நான் என்ன செய்கிறது? ஆனால் இன்றுதான் பூக்காரியிடம் சொல்லிப் பூக் கொண்டுவரச் சொன்னேன். உங்கள் மனம் நோகக்கூடாது என்பதற்காகத்தான் இதை உங்களுக்குத் தெரியாமல் வாங்கினேன். மன்னித்து விடுங்கள். இனிமேல் பூக்காரி

யிடம் ஒரு நாளும் நிஜப் பூ வாங்கமாட்டேன்" என்று விம்மலுக்கிடையில் கூறினாள் இந்திராணி.

மதனகோபால் சிறிது நேரம் மௌனமாக நின்றான். பேசுவதற்கு வார்த்தை வெளிவரவில்லை.

"பூக்காரியிடம் இனிமேல் நீ பூ வாங்க வேண்டாம்."

"இல்லை, ஒரு நாளும் வாங்க மாட்டேன்."

"நானே உனக்கு நிஜப் புஷ்பங்கள் வாங்கிக் கொண்டு வந்து கொடுக்கிறேன். நானும் செயற்கைப் பூ செய்வதை இன்றுடன் விட்டுவிடுகிறேன்."

"என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள் இந்திராணி.

உற்சாகமே உருவான மதனகோபால் களைத்து அயர்ந்து போனவனைப்போல் இருந்தான். முகத்தில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக்கொண்டு பக்கத்திலுள்ள நாற்காலியில் உட்கார்ந்தான்.

"ஆமாம், இந்திரா! இந்தப் பூ உன் மனதிற்குப் பிடித்திருக்கிறது என்று நினைத்துத்தான் இதை உனக்குக் கொண்டு வந்து கொடுத்தேன். மேலும் மேலும் அழகான புஷ்பங்கள் செய்தேன். ஆனால் என் எண்ணம் தவறு என்பது இப்பொழுதுதான் தெரிந்தது. நான் செய்த பூக்கள் எவ்வளவு மலர்ச்சியுடன் விளங்கினால்தான் என்ன? அவற்றால் உன் மனதை மலரவைக்க முடியவில்லை. என் கலைத் திறமையை உலகம் புகழுகிறது. ஆனால் இரண்டு வருஷங்களாக உன் அழகு கொஞ்சம் கொஞ்சமாகக் குன்றி வரும் காரணம் இப்பொழுதுதான் எனக்குத் தெரிந்தது. உனக்கு வேதனை உண்டாக்கி உன் அழகைக் கெடுக்கும் என் கலைத்திறமையும் ஒரு திறமையா? இப்பொழுதே இந்தத் தொழிலை விட்டு விடுகிறேன்."

"எனக்காக உங்கள் பூக் கடையை எடுக்க வேண்டாம்."

"நிஜப் பூக்கடையே வைக்கப் போகிறேன். புத்தம் புதிய அன்று மலர்ந்த புஷ்பங்களைக் கொண்டு வந்து விற்கப் போகிறேன். அதையே உன் தலையில் சூட்டி விடப் போகிறேன். சந்தோஷந்தானே?" என்று கூறி, கீழே கிடந்த கூடையிலிருந்து ஒரு பெரிய ரோஜாவை எடுத்து அவள் தலையில் சூட்டினான். சூட்டும்போது, ரோஜாவிலிருந்து உதிர்ந்த இதழ் காற்றில் பறந்தது. அப்பொழுதே இந்திராவின் துயரம் எல்லாம் காற்றில் பறந்து சென்றது.

---

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

## தமிழ் எழுத்தாளருக்கு ஒரு சந்தர்ப்பம்

- பதினெட்டு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்திய தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புதுடெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.
- இந்திய தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 3,750 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:- ஆசிரியர், "கல்கி" கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- பரிசுக்காகத் தெரிந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திரும்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# யுத்த கேந்திரம்

ஜெயமணி

கோரியா (தொடர்ச்சி)

கொரியாவைப் பற்றிக் குறிப்பிடும்போது, அதற்கும் சீனுவுக்கும் மத்தியில் அறுநூறு மைல்களுக்குமேல் உள்ளே செல்லும் மஞ்சள் கடலின் விசேஷத்தைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். அங்கு கடலோரமாக ஜலம் மஞ்சள் நிறமாக இருப்பதாலேயே அதற்கு மஞ்சள் கடல் என்ற பெயர் வழங்கப்படுகிறது. சீனுவிலுள்ள ஆறுகள் மஞ்சள் நிறமான வண்டல் மண்ணை அடித்துக்கொண்டு கடலில் வந்து சேருவதே அங்கு தண்ணீர் மஞ்சள் நிறமாக இருப்பதற்குக் காரணம். மஞ்சள் கடலின் விஸ்தீரணமும் சற்றேறக்குறைய கொரியாவைப் போல் எண்பதாயிரம் சதுர மைல்களுக்கு மேல் இருக்கிறது!

சென்ற யுத்தத்துக்குப் பின் ருஷ்யா ஆக்கிரமித்துக் கொண்ட வடக்கு கொரியா தொழிற்சாலைகள் அதிகமாக உள்ள பிரதேசம். அமெரிக்கா ஆக்கிரமித்துக் கொண்ட தெற்கு கொரியா முழுவதும் விவசாயப் பிரதேசமாகும். எனவே, இரண்டு பிரதேசங்களுக்கும் இருந்து வரும் அரசியல் முரண்பாட்டுக்கு மேற்படி பொருளாதார முரண்பாடு தூபம் போடுவதாக இருக்கிறது!

★

கொரியாவின் புராதனப் பெயரான சோஸன் என்பதற்குக் காலை அமைதி நிலவும் பூமி என்பது பொருள் என்று ஏற்கெனவே கூறப்பட்டிருக்கிறது. கொரியாவுக்கு அந்தப் பெயர் ஏற்பட்டதிலிருந்துதான் அதன் சரித்திரமும் ஆரம்பமாகியது.

கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன் கிஸே என்ற சீனப் பிரமுகர் தம்மைச் சேர்ந்த பரிவாரங்களான ஐயாயிரம் பேர்களுடன் கொரியாவுக்கு வந்து சேர்ந்தார். சீனுவில் உள்நாட்டுப் போர் மூண்டு ராஜ்யங்கள் மாறியபோது ஷாங் வம்சத்தைச் சேர்ந்த ஒரு மன்னரிடம் கிஸே உயர்தர அதிகாரியாக இருந்தார். கிஸேயையும் அவருடைய பரிவாரங்களையும் பின்பற்றி மேற்கொண்டு கொரியாவுக்கு ஏராளமான சீனர்கள் சென்று குடியேறினர். கிஸேயின் சந்ததிகள் கொரியாவைத் தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு மேல் ஆட்சி புரிந்து வந்தார்கள். கொரியாவில் சீனக் கலைகளையும், கல்வியையும், சிற்பங்களையும், விவசாயத்தையும், பட்டு நெசவுத் தொழிலையும் பரப்பியவர்கள் அவர்களே. சீனுவிலிருந்துதான் கொரியாவில் பௌத்த மதமும் பரவியது.

கொரியா முதலில் ஒற்றுமையின்றிப் பல பிரிவுகளாகப் பிரிந்து கிடந்தது. ஆனால் கி. பி. 935-ல் கொரியா ஒற்றுமைப்பட்டு ஒரே சுதந்திர நாடாகத் திகழ்ந்தது. அந்த நாட்டில் அவ்வாறு ஒற்றுமையும் சுதந்திரமும் உதயமாகும்படி செய்தவர் வாங் கின் என்ற மன்னர்தான். அவருடைய சந்ததிகள் நானூற்றைம்பது வருஷ காலம் கொரியாவில் ஆட்சி செலுத்தி வந்தார்கள்.

கொரியா மிகவும் முன்னேற்றம் அடைந்து விளங்கிய காலத்தில் அதனிடம் சக்தி பொருந்திய கடற்படை



ஸியோல் நகரில் உள்ள சலவைக் கல் ஆலயம்

இருந்ததென்றும், அதைக் கொண்டு கொரியர்கள் ஜப்பான்மீது படையெடுத்தார்கள் என்றும் பண்டைய சரித்திர நூல்களிலிருந்து தெரிகிறது. அது மாத்திரமல்ல, ஜப்பானியர்கள் ஆதியில் கொரியாவிலிருந்து வந்தவர்களே என்றும் சீனக் கலைகள், கல்வி, மதம் முதலியன சீனாவிலிருந்து கொரியாவுக்கு வந்தது போல் கொரியாவிலிருந்து ஜப்பானுக்குப் பரவின என்றும் தெரிகிறது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் அநேகமாக ஆசியாவின் சகல நாடுகளிலுமுள்ள நகரங்களை அழித்துத் தாம் போகும் இடங்களை யெல்லாம் பாலைவனமாக்கிய செங்கிஸ் கான் என்ற சைத்தானின் கொடுமைக்கும், ஆசியாவின் வடகிழக்குக் கோடியில் உள்ள கொரியா உள்ளாக நேர்ந்தது. செங்கிஸ் கான் ஆசியாவின் யமனாக விளங்கியதும், மேற்கே கருங் கடலிலிருந்து கிழக்கே பசிபிக் மகா சமுத்திரம் வரையில் ஆசியா முழுவதும் செங்கிஸ் கானின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததும் சரித்திரத்தில் மறக்க முடியாத சம்பவங்கள் ஆகும்.

பின்னர் 1392-ம் ஆண்டிலிருந்து லி தெய்ஜோவும் அவருடைய சந்ததிகளும் கொரியாவை ஆட்சி புரிந்து வந்தனர்.

*

கொரியா மீது ஜப்பானின் முதல் படையெடுப்பு 1592-ல் ஆரம்பமான போது அந்த இரண்டு நாடுகளுக்கும் ஆறு ஆண்டுகள் வரையில் கோர யுத்தம் நடந்தது. அப்போது ஜப்பானியர்கள் இழைத்த கொடுமைகள்தான் ஜப்பானியர்மீது கொரியர்களுக்கு அன்றிருந்து இன்றும் பொங்கி வரும் தீராத துவேஷத்துக்கு மூல காரணமாயிற்று.

முதன் முதலாக ஜப்பானியர்கள் பூஸான் துறைமுகத்தில் இறங்கிக் கொரியாமீது படையெடுத்தார்கள். எனினும் இறுதியில் கொரியர்கள் ஜப்பானியரை விரட்டி யடித்துவிட்டுத் தங்களுடைய நாட்டைக் காப்பாற்றிக் கொண்டனர். அதிலிருந்து கொரியர்கள் தங்களுடைய துறைமுகங்களில் அன்னியர் தலைகாட்டவும் கூடாதென்று தடுத்து வந்தார்கள். வியாபாரத்துக்காகக் கூட அன்னியர்களை அனுமதிக்க அறவே மறுத்து விட்டார்கள்.

மூன்று நூற்றாண்டுகளுக்குமேல் கொரியர்கள் அவ்வாறு பிடிவாதமாக இருந்து வந்தார்கள். பிறகுதான் ஜப்பானுடனும், அமெரிக்கா முதலிய ஐரோப்பிய நாடுகளுடனும் கொரியாமுதன் முதலாக வர்த்தக உடன்படிக்கைகள் செய்து கொண்டது. வெளிநாடுகளுடன் வர்த்தக உறவு வைத்துக்கொள்ள வேண்டும் என்ற 'நல்லெண்ணத்துடன் கொரியா செய்துகொண்ட மேற்படி உடன்படிக்கைகளே அந்த நாட்டின் இன்றைய பரிதாபமான நிலைக்குக் காரணம் எனலாம்.

கொரியாவுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்துகொண்ட நாடுகளுக்குள் மும்முரமான போட்டி ஏற்பட ஆரம்பித்தது. ஒவ்வொரு நாடும் கொரியாவில் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்த முயற்சித்தது.

அப்போது கொரியா சக்கரவர்த்தியைத் தங்கள் தங்களிடம் அடங்கி நடக்கும்படி செய்வதற்காகச் சீனாவும் ஜப்பானும் போட்டியிட்டு வந்தன. அதன் விளைவாக 1894-ம் வருஷம் சீன-ஜப்பான் யுத்தம் நடந்தது. அதில் ஜப்பான் வெற்றி பெற்றதால், கொரியாவில் சீனர்களின் செல்வாக்குக் குறைந்து ஜப்பானியரின் செல்வாக்கு மிகவும் அதிகமாயிற்று.

கொரியாவில் ஜப்பானியரின் கை ஓங்கி வருவதை ருஷ்யா விரும்பவில்லை. கொரியா தனக்கு அடங்கியிருக்க வேண்டும் என்று ருஷ்யா எண்ணியது. எனவே, அந்த நாட்டில் ஜப்பானியரின் செல்வாக்கை ஒழிப்பதற்கு யுத்தத்தில் இறங்குவதைத் தவிர ருஷ்யாவுக்கு வேறு வழி எதுவும் இல்லாததால், 1904-ம் ஆண்டு ருஷ்ய-ஜப்பான் யுத்தம் ஆரம்பமாயிற்று. அந்தப் போரில் ருஷ்யர்கள் படுதோல்வி யடைந்தனர்.



விதவிதமான தங்க, வெள்ளி நகைகளை அணியும் கொரியா தேசத்துப் பெண்கள்

அந்த நிலையில் கொரியாவிலே
ாருடைய செல்வாக்கு நிலைப்பது என்
து பற்றிச் சந்தேகம் இருக்க இடமில்லை
ல்லவா? ருஷ்யாவும் சீனாவும் தோல்வி
டைந்து விட்டதால் கொரியாவில் ஜப்
ானுக்கு இருந்துவந்த போட்டி அடி
யாடு மறைந்தது.

முதலில் கொரியாவின் சுதந்திரத்துக்கு
வ்விதக் குந்தகமும் விளைவிப்பதில்லை
ன்று ஜப்பான் உறுதி கூறியதெனி
ம். 1910-ம் வருஷம் கொரியா முழு
தையும் ஜப்பான் கபளீகரம் செய்தது.
தாவது கொரியர்கள் ஜப்பானியரின்
டிமைக ளாயினர். கொரியா சக்கர
ர்த்தி சிம்மாசனத்தைத் துறந்தார். அதி
ருந்து தங்களுடைய அடிமைத்தனத்
க்குக் காரணஸ்தர்களான ஜப்பானிய
ரக் கொரியர்கள் முன்னரைக் காட்டி
ம் அதிகமாக வெறுக்கலாயினர்.

கொரியாவில் ஜப்பானியரின் பூரண
திக்கம் ஏற்பட்ட பின் தங்களுக்கு
ரோதமாகவும் சுதந்திர உணர்ச்சியுட
ம் இருந்த கொரியர்களை யெல்லாம்
ப்பானியர் சித்திரவதை செய்யவும்
கான்று குவிக்கவும் ஆரம்பித்தார்கள்.
காரியா மகாராணி மின் ஜப்பானிய
ப்பாய்களால் கொல்லப் பட்டாள்.
காரியா தேசபக்தர்களில் பலர் தூக்கு
மடையில் மாண்டனர். ஜப்பானியரின்
திக்கத்தில் கொரியா பல மாகாணங்க
ாகப் பிரிக்கப்பட்டது. பிரிட்டிஷார்
ந்தியாவில் கவர்னர் ஜெனரலை நிய
த்து வந்ததுபோல ஜப்பானியரும்
காரியாவில் தங்களுடைய பிரதிநிதி
ாக ஜப்பானியரை மாத்திரமே கவர்னர்
ஜெனரலாக நியமித்து வந்தார்கள்.

கொரியர்களின் புரட்சியும் ஜப்பானி
ரின் கொடுங்கோன்மையும் ஓரளவு
ணிந்தபின், ஜப்பானியர் அந்த நாட்டில்
க்க வேலைகளை மேற் கொண்டார்கள்.
ப்பானியருடைய ஆதிக்கத்தின் கீழ்
காரியா பல துறைகளிலும் அபாரமாக
ன்னேற்றம் அடைந்த தென்றாலும்,
காரியர்களின் சுதந்திரக் கிளர்ச்சி
கைந்து கொண்டுதான் இருந்தது.

இரண்டாவது மகா யுத்தத்தின்போது
ப்பானியரின் ஆதிக்கத்திலிருந்து கொரி
ாவை மீட்பதாயும் அதன் சுதந்திரத்
க்கு உத்தரவாதம் அளிப்பதாயும் வல்
ரசுகள் உறுதி கூறின. அவ்வாறு
றுதிமொழி வளித்த ஒப்பந்தப் பத்தி
த்தில் ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன்,
ா முதலிய வல்லரசுகள் கையெழுத்
ட்டன. ஆனால், அதே வல்லரசுகள்
ான் இன்று கொரியாவைப் போர்க்கள
ாகச் செய்து பாழ்படுத்தி வருகின்றன!












# காலக்ஷேபம்

### அவர் தொழில்!

வந்தவர் :—என் பிழைப்பு இப்பொழுது நாளு மாசமாக ரொம்ப மோசமாக இருந்து வருகிறது. இப்பொழுதெல்லாம் யாரும் வருகிறதே யில்லை. கொஞ்ச நாட்களாக யாரும் என்னை மதிக்கிறதே யில்லை. அதற்கு என்ன காரணம், ஜாதக ரீதியாக?

ஜோஸியர் :—உங்களுக்கு என்ன தொழில்?

வந்தவர் :—ஜோஸியத் தொழில்தான்!

★

### ஆச்சரியம்தான்!

உபாத்தியாயர் :— முட்டையிலிருந்து கோழிக்குஞ்சு வெளியே வருகிறதே. இயற்கையில் இதற்குமேல் வேறு ஏதாவது ஆச்சரியம் உண்டா?

ஒரு சிறுவன் :—உண்டு, ஸார்! முதல் முதலில் முட்டைக்குள் கோழிக் குஞ்சு போய்ப் பதுங்கிக் கொள்ளுகிறதே, அது பெரிய ஆச்சரியம் இல்லையா?

★

### பார்த்துத்தான்!

தகப்பனர் :—பள்ளிக்கூடத்திலே புது வாத்தியார் எப்படிப் பாடம் சொல்லித் தருகிறார்?

பையன் :—புத்தகங்களைப் பார்த்துப் பார்த்து, அப்பா!

★

### சட்டம் இல்லை!

காவற்காரன் :—ஐயா, இந்தக் குளத்திலே யாரும் குளிக்கக் கூடாதுங்க! அது சட்டமுங்க!

ஊருக்குப் புதியவர் :—அதை முன்னலேயே சொல்லுவதற்கென்ன? நான் சட்டை, கோட்டு எல்லாவற்றையும் கழற்றுகிற வரையில் சும்மா பார்த்துக் கொண்டிருந்தாயே!

காவற்காரன் :— அதை யெல்லாம் தடுக்கிறதற்குச் சட்டம் இல்லீங்க!

★

### வெளுத்துவிட்டார்!

சங்கீத வித்வான் :—நேற்றைக்கு வண்ணுரப் பேட்டையிலே நடந்த நம்ம கச்சேரி எப்படி ஸார்!

ரஸிகர் :—பிரமாதம் போங்கள்! வெளுத்துக் கட்டிவிட்டீர்கள்!

### எப்படி?

கணவன் (ஹோட்டல்காரர்):—இந்த பாதாம் ஹல்வா அப்படியே எங்கள் ஹோட்டல் பாதாம் ஹல்வா மாதிரியே இருக்கிறதே!

மனைவி :—ஏன்? நான் நன்றாய்த் தானே பண்ணி யிருக்கிறேன்...நல்ல பாதாம் பருப்பையே போட்டு...!

★

### தெரியாது!

பாட்டி (பேத்திக்குப் பாட்டு சொல்லிக் கொடுப்பவரிடம்):-கீர்த்தனங்கள் போதும்; நல்ல பத்தியங்களா இரண்டு சொல்லி வையுங்கள்.

பாட்டு வாத்தியார் :—பத்தியங்களெல்லாம் எனக்குத் தெரியாது நாட்டு வைத்தியரைக் கேளுங்கள்!

★

### நல்ல கேள்வி?

ராமன் :—நீ திருடன் என்று திட்டிடிதாகக் கேள்விப்பட்டேன். என்னைய திட்டினுய்?

கோவிந்தன் :— என்னப்பா, இது நீ ஒருவன்தாஞ உலகத்தில் திருடன்

★

### பழையதும் புதியதும்!

"கடைக்காரரே, உங்களிடம் நல் மாம்பழங்கள் கிடைக்குமா? உயர்ந் ரகமா யிருக்க வேண்டும்."

"பேஷான பழங்கள் கிடைக்கும் இருபது வருஷங்களாக நாங்க உயர்ந்த ரக பழங்களையே விற் வருகிறோம்!"

"எனக்கு அத்தனை நாளைய பழங்கள் வேண்டாம். அந்த இனுக பழங்களிலேயே புதிய பழங்க வேண்டும்."

★

### நம்பவில்லை!

கடைக்காரர் :—அடாடா, மேமே யெல்லாம் வர்ணம் பட்டு விட்டத வாசல் கதவிலேயே, 'புது வர்ண பூசி யிருக்கிறது' என்று ஒரு அட்டை யில் எழுதித் தொங்க விட்டு இருமே, நீங்கள் பார்க்க வில்லையா

வந்தவர் (எரிச்சலுடன்):—பார்க்க லென்ன, நன்றாய்ப்பார்த்தேன். உங்க கடையில் விற்கும் எல்லாச் சாமா களையும் நீங்கள் புதிது என்றுதா சொல்லுகிறீர்கள். ஒரு சரக்கும் நீங்க சொல்கிறபடி இருப்பதில்லை. ஆ யினுல் இதையும் நான் நம்பவில்லை

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 301. சொல்லினாற் சொலக் கற்றிலம்!

கும்பகர்ணனை விட்டுப் பிரிந்து போன விபீஷணன் பாசறையில் இருந்த ராமனிடம் போய் நடந்த செய்தியைச் சொன்னான்.

ராமனும், "ஆம், விதி கும்பகர்ணனைத் தடுத்து விட்டது, நம்மிடம் வர. இனி யுத்தம் நடக்க வேண்டியதுதான்" என்று சொல்லிக் கும்பகர்ணனது குணநிசயங்களைப் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தான்.

இதற்குள் கும்பகர்ணன் போர் முனைக்கு வந்து விட்டான்.

லக்ஷ்மணன் "நானே போய்க் கும்பகர்ணனோடு யுத்தம் செய்கிறேன்" என்று சொன்னான். 'அப்படியே செய்' என்று ராமன் சொல்லி விட்டான்.

* * *

யுத்த களத்தில் யுத்த சன்னத்தராய் கும்பகர்ணன் லக்ஷ்மணன் இருவரும் எதிரெதிரே நிற்கிறார்கள்.

மகா வீரர்களான கும்பகர்ணன் லக்ஷ்மணன் இருவரும் யுத்தம் செய்யப்போகிறார்கள் என்பதை அறிந்து பலரும் வந்து நாலா பக்கத்திலும் ஆர்வத்தோடு நிற்கிறார்கள்.

கும்பகர்ணனுடைய மனநிலை இன்னதென்பது நமக்குத் தெரியும். ஏதோ போர் செய்ய வேண்டியது மடிய வேண்டியது. அண்ணனுக்கென்று உயிரைத் தத்தம் பண்ண வேண்டியது. அவ்வளவுதான். அதற்கு மேல் கவலையில்லை அவனுக்கு.

ஆனால் லக்ஷ்மணனுடைய மனநிலை மிக்க ஆத்திரத்தோடு கூடியது. ஏதோ வெறும் வெற்றி கொள்வது என்பதல்ல. சீதா பிராட்டியை அல்லவா மீட்க வேண்டும். ஆகவே ஒரே ஆத்திரம் கொண்டவனாய் நிற்கிறான் லக்ஷ்மணன்.

அத்தகைய லக்ஷ்மணனைப் பார்த்துப் பேசுகிறான் அந்தக் கும்பகர்ணன்.

"நீயும் நானும் சாமானியப் பட்டவர்களா? நாம் செய்யும் யுத்தத்தைப் பார்ப்பதற்குத் தேவர்கள் கூட வந்திருக்கிறார்கள்.

"பூர்வமான யுத்தம் செய்யும் முறை இன்னதென்று உனக்குத் தெரியும். அதாவது கொஞ்ச நாழியல் நாம் இருவரும் ஒருவருக்கொருவர் வீர வார்த்தைகள் சொல்லிப் பார்க்க வந்தவர்களைச் சந்தோஷப்படுத்த வேண்டும்."

'இராமன் தம்பி நீ,
இராவணன் தம்பி நான்
இருவேம்
பொராநின் றேம்,இது
காணிய வந்தனர்
புலவோர்:
பராவு தொல்செரு
முறை,வலிக் குரியன
பகர்ந்து.
விராவு நல்லமர்
விளைக்குதும் யாம்'என
விளம் பா.

[இராமன் தம்பி நீ: உலகம் புகழும் வீராதி வீரனான ராமனுடைய தம்பியாய் நிற்கிறாய் நீ: இராவணன் தம்பி நான்: நானோ சகல உலகையும் கட்டி ஆளும் ராவணேஸ்வரனுடைய தம்பி: இருவேம் பொரா நின்றேம்: இத்தகைய நாம் இருவரும் போர் செய்வதற்காக நிற்கிறோம்: இது காணிய வந்தனர் புலவோர்: இந்த யுத்தத்தைப் பார்ப்பதற்கென்றே வந்திருக்கிறார்கள் தேவர்கள் கூட (புலவோர்: தேவர்): பராவு தொல் செருமுறை: நெடுகிலும் அங்கீகரிக்கப்பட்ட பழமையான போர் முறைப்படி: வலிக்கு உரியன பகர்ந்து: வீரத்துக்கு உரிய வார்த்தைகளைச் சொல்லி விட்டு: விராவு நல் அமர் விளைக்குதும் யாம் என: அம்புகள் பாய்ந்து கலக்கும் சரியான போரைப் புரிவோம் நாம் என்று: விளம்பா: பேசி விட்டு.]

* * *

மேலும் தொடர்ந்து கூறுகிறான் கும்பகர்ணன்.

'பெய்த வந்நின்ஓர்
பெண்கொடி எம்உழை
பிறந் தான்;
செய்த குற்றம்ஒன்
றில்லவன் நாசிவெம்
சினத் தாக்க

கொய்த கொற்றவ !!
மற்றவன் கூந்தல்தொட்(டு)
ஈர்த் த
கைத லத்திடை
வீழ்த்துவன் : காக்குதி'
என் ருன்.

[பெய்தவத்தின் : அடிக்கடி நோன்பிருந்து செய்த தவத்தின் காரணமாக : ஓர் பெண் கொடி எம் உழை பிறந்தாள் : ஒரு அருமையான பெண், சூர்ப்பனகை எங்களிடைப் பிறந்தாள் ; செய்த குற்றமொன்று இல்லவள் : ஒரு குற்றமும் செய்யாதவள் அவள் ; அவளது நாசியை ; கொய்த கொற்றவ : வாள் கொண்டு கொய்த வீர சிகாமணியே ; மற்றவன் கூந்தல் தொட்டு ஈர்த்த : அவனுடைய கூந்தலைப் பிடித்து இழுத்த ; கை தலத்திடை கிடத்துவன் : அந்த உன் கையை வெட்டித் தரையில் கிடத்தப் போகிறேன் ; காக்குதி என்ருன் : காத்துக்கொள் என்று ஒரு பேச்சுப் பேசி முடித்தான்.

குறிப்பு:—மூன்று பாவங்கள் செய்யுளில் தொனிக்கின்றன.

'பெண் கொடி எம் உழை பிறந்தாள்': தங்கை பிறந்தாள் என்கிற அருமை பாவம் தொனிக்கிறது.




"வாத்தியார் ஸார்! போன வருஷமே என் பையனுக்கு 'பெயில்' போட்டு விட்டீர்கள். இந்த வருஷமாவது கொஞ்சம் பார்த்துத் தூக்கிப் போடுங்கள் !"

" இந்தப் பையனையா?...என்னுல் முடியாது, ஸார் !...ஹெட்மாஸ்டர் குண்டுராவிடம் போய்ச் சொல்லுங்கள் !"

'தங்கையின் நாசியைச் சிறுபிள்ளைத் தனமாகக் கோபத்தில் கொய்த வீரனே' என்பது இகழ்ச்சி பாவம்.

இந்த இரண்டு பாவங்களும் ஒதுங்கி வீராவேச பாவத்திற்கு இடங்கொடுக்கிற லாகவம் அபூர்வமான கவி ரூபம். ]

• • •

இருளையே வர்ணமாக வடித்துப் பூசியது போல் இருந்தது கும்பகர்ணனுடைய கரிய மேனி. அப்படிப்பட்ட கும்பகர்ணன் அந்த விதமாக வீரப் பேச்சுப் பேசினுன். அதற்கு மறுமொழியாக லக்ஷ்மணனும் பேசுகிருன் :

அல்லி ளுற்செய்த
நிறத்தவன் அனையது
பக ர,

மல்லி ளுற்செய்த
தோளவன், 'மாற்றங்கள்
நும் பால்

வில்லி ளுற்சொல்வ
தல்லது,—வெந்திறல்
வெள் கச்

சொல்லி ளுற்சொலக்
கற்றிலம் யாம்' எனச்
சொன் ஞன்

[அல்லினுற் செய்த நிறத்தவன் : இருள் கொண்டு செய்த நிறத்தவனை கும்பகர்ணன் ; அனையது பகர : அந்த வீரப் பேச்சைப் பேசி நிறுத்தவும் ; மல்லினுற் செய்த தோளினன் : மல் யுத்தத்தையே பிசைந்து செய்த மாதிரி இருந்தது லக்ஷ்மணனது தோள் ; அந்தகைய தோளினன் பேசுகிருன் :

'மாற்றங்கள் நும்பால் : உன் வார்த்தைக்குப் பதிலான வார்த்தைகளை உன்னிடம் ; வெம்திறல் வெள்க: பராக்கிரம் கொண்ட வீர லக்ஷ்மியானவள் நம் பேச்சைப் பார்த்து நாணும்படி ; சொல்லினுற் சொலக் கற்றிலம் யாம் எனச் சொன்ஞன் : சொல்லினுல் எதிர் மாற்றம் சொல்லும் பள்ளிக்கூடத்தில் நாங்கள் படிக்கவில்லை' என்று சொன்ஞன்.]

மூன்று செய்யுள்களும் அபூர்வமான நாடக இயலும் பாவ இயலும் கொண்டவைகளாய் அமைந்திருக்கின்றன. கம்பரது முத்திரை கொண்ட கவிகள். லக்ஷ்மணனது வீரம் கலந்த ஏளனப் பேச்சு நம்மனசை விட்டு அகலாது.

# நரிக்காட்டு ராஜா

ஆசிரியர்: எஸ். கோபாலன்    மொழி பெயர்ப்பு: எஸ். வி. எஸ்.

## 23. வழக்கு விசாரணை

வழக்கு நடக்க இருந்த அன்று காலை வக்கீல் ராகவனுக்கு ஒரு செய்தி வந்தது. அதாவது சப்-மாஜிஸ்டிரேட் கோர்ட்டிலிருந்த வழக்கு ஸ்பெஷல் கௌரவ மாஜிஸ்டிரேட் திருவாளர் தாமோதரன் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது என்பது தான் அந்தச் செய்தி.

திருவாளர் தாமோதரனும் வக்கீல் ராகவனும் பிஞ்சிராப்போல் கிளப்பின் அங்கத்தினர்கள். வக்கீல் ராகவன் கிளப்பில் திருவாளர் தாமோதரனைச் சந்திக்கும் போதெல்லாம் அவரை வேண்டிய மட்டும் பரிகாசம் செய்து சிரித்திருக்கிறார். இந்தச் செய்கையின் பலனாக திரு தாமோதரன் இவ் வழக்கில் ஏதாகிலும் செய்து விடுவாரோ என்று பயந்தார். எப்போதுமே குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னும் அல்லவா?

சப்-இன்ஸ்பெக்டர் தாமோதரன் தமக்குப் பெயரும் கீர்த்தியும் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவலில் இவ்வழக்கைப் பற்றிய நீள நீளமான விவரங்களை மேலதிகாரிகளுக்கு எழுதி. 'இத்தகைய விசித்திர வழக்கு விசாரிக்க விசேஷ கோர்ட்டு ஏற்படுத்த வேண்டும்' என்று கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கிணங்க ஜில்லா மாஜிஸ்டிரேட்டும், 'இந்த வழக்கில் நரிகளும் சம்பந்தப்பட்டிருக்கின்றனவே. நரிகளைப் பற்றித் திரு தாமோதரன் நன்கு தெரிந்தவராயிற்றே' என்று வழக்கைக் கௌரவ மாஜிஸ்ட்ரேட் திருவாளர் தாமோதரன் கோர்ட்டுக்கு மாற்றினார். அதுதான் விஷயம்.

அன்று, சரியாக பதினொரு மணிக்குக் கௌரவ மாஜிஸ்டிரேட் திரு தாமோதரன் கோர்ட்டுக்கு வந்து விட்டார். கோர்ட்டுக்கு உள்ளும் வெளியிலும் இந்த வழக்கு விசாரணையைப் பார்க்க ஏக ஜனக் கூட்டம் கூடியிருந்தது. சப் - இன்ஸ்பெக்டர் தாமோதரன் விருப்பத்துக்கு மாறாக வக்கீல் ராகவன் பக்கத்திலேயே மாதவன் கங்காணிக்கு இடம் கொடுக்கப்பட்டிருந்தது. இவ்வழக்குத் தொடர சர்க்கார் தரப்பில் ஒரு ஸ்பெஷல் பப்ளிக் பிராஸிகியூட்டர் நியமிக்கப்பட்டிருந்தார். அவர் எழுந்திருந்து சப்-இன்ஸ்பெக்டர் தாமோதரன் கூறியவற்றை ஆதரித்துப் பேசினார். ஆனால் கோர்ட்டார் சற்றும் தம் கட்சியை ஆதரிப்பதாகத் தோன்றாமற் போகவே, நடக்கிறபடி நடக்கட்டும் என்று தாம் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு உட்கார்ந்தார் பப்ளிக் பிராஸிகியூட்டர்.

இனி விசாரணை. இந்த விசாரணை ஆரம்பமாவதற்கு முன் லா பாயிண்ட் ரகுநாதன் எல்லோரும் பார்க்கும்படியாக எழுந்திருந்து வக்கீல் ராகவன் காதில் ஏதோ சொன்னார். உடனே வக்கீல் ராகவன் எழுந்திருந்து, "சாட்சிகளை விசாரிக்கும்போது, சப் - இன்ஸ்பெக்டர் கோர்ட்டுக்கு வெளியிலிருத்தல் மிக அவசியம் என்பதைக் கோர்ட்டாருக்குப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சாதாரணமாக இம்மாதிரி நான் வற்புறுத்தும் வழக்கம் கிடையாது. ஆனால் இவ்வழக்கில் சப்-இன்ஸ்பெக்டர் கொண்டுள்ள மனப்பான்மையானது என்னை என் கட்சிக்காரர் சார்பில் இவ்வுரிமையைக் கோரும்படி செய்து விட்டது. அதனால்தான் கேட்கிறேன்" என்றார்.

திரு தாமோதரன் உடனே தமது இணக்கத்தைத் தெரிவித்தார். சப்-இன்ஸ்பெக்டர் தமது இருப்பிடத்தை விட்டு வெளியே போகவேண்டியதாயிற்று. உடனே, அங்கே கூடியிருந்த மக்களிடையே ஒரு திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டதற்குப் போதிய அறிகுறிகள் தோன்றின. ஆனால் போகிற போக்கில் சப் - இன்ஸ்பெக்டர் தாமோதரன் திரு. தாமோதரனை ஏதோ வைது கொண்டுதான் போனார்.

விசாரிக்கப்பட்ட முதல் சாட்சி ராமன் அம்பலக்காரன். இவனுடைய அடுத்த வீட்டுக்காரன்தான் பிச்சைமுத்து. பிச்சைமுத்துவைவிட, எவ்வளவோ வயதானவன் ராமன். ஆனாலும் பிச்சை முத்து காலனின் பாசக் கயிற்றினால் முன்னமேயே கட்டுண்டு விட்டான். இருபது வருஷத்துக்கு முன் போலீஸுக்கு மாதுவைப்பற்றிச் செய்தியனுப்பிய விஷயத்தைப் பற்றிச் சொல்லக் கூடிய நபர்களில் இவன் ஒருவன்தான் இருந்தான். ஆகவே போலீஸார் இவனைச் சாட்சியாக அழைத்து வந்திருந்தார்கள்.

ராமன் அம்பலக்காரன், மாதுவின் மேல் நல்ல நரிக்காட்டு வாசிகளுக்கு எப்படி வெறுப்பு ஏற்பட்டது, ஏன் போலீஸ்காரரிடம் அவனைப் பிடித்துக் கொடுத்து விடத் தீர்மானித்தார்கள் என்பதைப் பற்றியெல்லாம் விவரமாகச்சொன்னான்.

இவ்விதம் அவன் சொல்லிக் கொண்டிருந்தபோதே, "விவசாயத்தில் ஒரு புது



முறையைக் கையாள விவசாயிகளாகிய உங்களுக்கு அவன் கற்றுக் கொடுத்தான் அல்லவா? ஏராளமாகச் செலவாகும் மாடுகளை விட்டுத் தொலைக்க அவன் வழி சொல்லிக் கொடுத்தான் அல்லவா?" என்றார் தாமோதரன்.

சாட்சி ராமன், இக் கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்கு முன் பிராஸிக்யூட்டர் குறுக்கிட்டு, "இக் கேள்விகளுக்கும் வழக்குக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையே?" என்றார்.

"நான் அப்படி நினைக்கவில்லை" என்று பிராஸிக்யூட்டருக்குப் பதில் சொல்லிவிட்டு, "சரி மேலே சொல்" என்று சாட்சி ராமனிடம் கூறினார் தாமோதரன்.

ராமன் அம்பலக்காரன், எப்படி மாது பிடிபட்டான் என்பதும், பிடிபட்ட அன்றிரவே போலீஸ்காரர்களிடமிருந்து தப்பி வந்ததையும், பிறகு அவன் ஊரை விட்டே போனதைப் பற்றியும் விவரமாகச் சொன்னான். அது மட்டுமல்ல, மாது நல்ல நரிக்காட்டை விட்டுச் சென்றதில் நரிகள் கோப மடைந்து, எப்படி நல்ல நரிக் காட்டு வாசிகள் மீது பழி வாங்கின என்பதையும் சொல்லி முடித்தான்.

வக்கீல் ராகவன் இந்தச் சாட்சியைத் தாம் குறுக்குக் கேள்விகள் கேட்டு விசாரிக்க வேண்டியவை ஒன்றும் இல்லை என்று கூறியதும் அடுத்த சாட்சி அழைக்கப் பட்டான். அவன் தான் நரிக்குறவன் போக்கிலி.

அவன் முதன் முதலில் மாதுவைச் சந்தித்த சம்பவத்தை விவரமாகச் சொல்லிவிட்டு, ஒரு நாள் மாலை மாது இரண்டு போலீஸ்காரர்களால் பிடித்துச் செல்லப் பட்டதையும் கூறினான். அப்போது, அந்த இரு போலீஸ்காரர்களை அழைத்து "இவர்கள்தானா?" என்று போக்கிலியைக் கேட்கப்பட்டது. போக்கிலியும் 'ஆமாம்' என்று ஒப்புக் கொண்டான்.

இதுவரை ஒருவாறு போக்கிலி உண்மையே சொல்லிக் கொண்டு வந்து விட்டான். இதற்குப் பிறகுதான் ஒரே பொய்யாகச் சொன்னான். அதாவது அன்று மாலை அவன் திரும்பி வந்தபோது அவ்விரு போலீஸ்காரர்களை ஆயிரம் நரிகள் தாக்கியதைத் தன் கண்ணாலேயே பார்த்ததாகச் சொன்னான்.

"அந்த நரிக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த நரி நல்ல பருத்த நரி" என்று சொல்லிவிட்டுத் திரு தாமோதரனைப் பார்த்து "அந்த நரியை எஜமானுக்குக் கூடத் தெரியும். அந்த நரியை எஜமானனிடம் கூடக் கொண்டு வந்தேன், கிணற்றில் கவலை இழுக்கப் பழக்கப்படுத்த. ஆனால் அப்போது அது தீனி தின்னாமல் மெலிந்து போயிருந்தது" என்று உற்சாகமாகத் தனக்கும், திருவாளர் தாமோதரனுக்கும் நரி விஷயமாக ஏற்பட்ட அநுபவங்களைக் கூறத் தொடங்கி விட்டான்.

போக்கிலி இவ்விதம் திரு. தாமோதரன் அவர்களை வெகு நன்றாகப் பரிச்சயமானவன் போல் பேசியது அங்கே குழுமியிருந்தவர்களுக்கெல்லாம் ஒரே ஆச்சர்யமாகப் போய்விட்டது. திரு தாமோதரனுக்கோ கஷ்டமாகப் போய் விட்டது. "வாயை மூடுகிறாயா? அல்லது அபராதம் போடட்டுமா? இங்கே இந்த வழக்கைத் தவிர வேறு எதைப் பற்றியும் பேசக் கூடாது" என்று இரைந்தார்.

"எஜமான் கோபப் படாதீங்க. உங்களுக்குச் சும்மா ஞாபகப்படுத்தினேன்..." என்று மறுபடியும் ஆரம்பித்தான் நரிக் குறவன்.

சர்க்கார் தரப்பு வக்கீல் "சும்மா இருக்க மாட்டாய்?" என்று கத்திவிட்டு உட்கார்ந்தார். உடனே வக்கீல் ராகவன் எழுந்தார், குறவனைக் குறுக்கு விசாரணை செய்ய.

"போக்கிலி!"

"எஜமான்!"

"அன்று மாலை மாதவனைப் பார்த்த பிறகு, மறுபடியும் பார்க்கவே இல்லையா?"

"இல்லை, எஜமான்!"

"ஒரு தடவை கூட?"

"இல்லை; ஒரே......"

"இங்கே பார், என் கேள்விக்குச் சரியாகப் பதில் சொல்ல வேண்டும். பிறகு நீ பார்க்கவே இல்லையா?" என்றார் வக்கீல்.

"அதற்குத்தான் அப்போதே பதில் சொல்லி விட்டானே" என்றார் திரு தாமோதரன்.

"சரி, யுவர் ஹானர்! அப்படியானால் விட்டு விடுகிறேன். இதோ பார், போக்கிரி."

"சரி, எஜமான்!"

"அப்படியானால் மாதவன் பையனாக இருந்தபோதுதான் பார்த்திருக்கிறாய் அல்லவா?"

"ஆமாம்."

"இந்த மனிதரை நீ பார்த்ததில்லையா?" என்று கேட்டார் வக்கீல் மாதவனைச் சுட்டிக்காட்டி.

"இல்லை."

"இந்த மனிதரை நீ பார்த்ததே கிடையாதே?"

"கிடையாது."

"நரிகளையும் அடையாளம் கண்டு சொல்ல முடியாதே?"

"முடியாது......முடி....யும்..."

"இதோ பார்! நீ நரிகளை அடையாளம் கண்டு சொல்ல முடியாது என்று கூறி விட்டாய்? பிறகு ஏன் மாற்றிக் கொள்கிறாய்?"

"இல்லை" என்றான் போக்கிரி.

உடனே வக்கீல் பெரிய வெற்றிகண்டு விட்டது போன்ற உணர்ச்சியுடன் உட்கார்ந்தார். ஆனால் போக்கிரி பிரசங்கத்தை முடிக்கவில்லை:

"எஜமான்! நரி பிடித்து, பழக்குவதற்கு இதுதானுங்க நல்ல காலம். இப்பொழுதெல்லாம் நரிகள் பரம சாதுக்களாகப் போய்விட்டன. முன்போல் அவை கடிப்பதில்லை..." என்று திரு தாமோதரனைப் பார்த்துச் சொல்லிக் கொண்டே வந்தான். அதற்குள் இரண்டு போலீஸ்காரர்கள் அவனை இழுத்துக் கொண்டு போய் கோர்ட்டுக்கு வெளியே விட்டார்கள்.

பிறகு 'ஏட் ஐயா' 380 ஐயும் போலீஸ்காரர் 395 ஐயும் விசாரித்தார்கள். அவர்களும், அந்தச் சம்பவத்திற்குப் பிறகு மாதுவைப் பார்க்கவில்லை என்று கூறி விட்டார்கள்.

கடைசியில், சர்க்கார் தரப்பு வக்கீல் குறுக்கு விசாரணை செய்ய சப் - இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டார். சப் - இன்ஸ்பெக்டர் அங்கே யிருந்தால்தானே, வருவதற்கு? அவரைத் தேடிப் பிடித்து வர ஆளை அனுப்பினார் சர்க்கார் தரப்பு வக்கீல். வரவில்லை. பிறகு அவர் வழக்கை ஒத்திப் போடச் சொல்லிக் கேட்டுக் கொண்டார். மாஜிஸ்டிரேட் தாமோதரன் 'முடியாது' என்று கூறிவிட்டார்.

வக்கீல் ராகவனுக்குப் பொறுமை தாங்கவில்லை. "எனக்குத் தெரியும், பெட்டிக்குள் ஏறுவதற்கு இன்ஸ்பெக்டருக்குத் தைரியம் கிடையாது என்று. வந்தால் அவர் வண்டவாளத்தை யெல்லாம் அவிழ்த்து விட மாட்டேனா? இருபது வருஷங்களுக்குப் பிறகு ஏன் மாதவன் மேல் வழக்குத் தொடர்ந்தார் என்ற 'குட்டு' உடைத் தெறிய மாட்டேனா? அது தெரிந்துதான் ஆசாமி வரவில்லை" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

"என்ன ரகசியம்? என்ன குட்டு அவர் மேல் சுமத்தப் பார்க்கிறீர்?" என்றார் சர்க்கார் தரப்பு வக்கீல்.

"நான் ஒன்றும் அவர் தலையில் கட்டவில்லை. உண்மை விஷயத்தைத் தான் சொல்கிறேன். சப் - இன்ஸ்பெக்டர் தாமோதரனுக்கு மாதவன் மீது கோபம். அந்தக் கோபத்துக்குக் காரணம் மாதவன், தம் வீட்டில் நிகழ்த்திய விசேஷத்துக்குத் தாமோதரனை அழைக்கவில்லை என்பதுதான்" என்றார் ராகவன்.

"சரி, அந்த மனுஷன் இல்லாமலேயே இந்த வழக்கை முடித்து விடுவோம்" என்றார் திரு தாமோதரன்.

இடை வேளைக்குக் கோர்ட்டு கலைந்தது. திரு. தாமோதரன்—தமது அறைக்குள் சென்றதும் தீர்ப்பை எழுதத் தொடங்கினார். அவர் தீர்ப்பைக் கேட்க ஆவலாக இருந்த ஜனங்கள், அவர் எழுதுவதை அறைக் கதவின் சாவித் தொளை வழியாகப் பார்த்தனர். மாதவன் கட்சியைச் சேர்ந்தவர்களோ, தீர்ப்பு சாதகமாக இருக்குமோ பாதகமாக இருக்குமோ என்று பயந்து கொண்டிருந்தனர். ஆனால் லாயர் ராகவனோ தீர்ப்பு தமக்குச் சாதகமாகத்தான் இருக்க



முடியுமே தவிர, வேறு எவ்விதமாகவும் இருக்க முடியாது என்று கூறிக் கொண்டிருந்தார். இப்படிப் பேசிக்கொண்டிருந்த போதே இடைவேளை முடிந்து, 'கோர்ட்டு' கூட ஆரம்பித்தது.

திருவாளர் தாமோதரன் கதவைத் திறந்துகொண்டு, வியர்க்க விருவிருக்க வெளியே வந்தார். நேரே தம்முடைய ஆசனத்துக்குச் சென்று அந்த நீண்ட தீர்ப்பை அந்த விநாடியே வாசிக்க ஆரம்பித்து விட்டார்.

வக்கீல் ராகவனும் சர்க்கார் தரப்பு வக்கீலும் ஒருவரை யொருவர் ஒன்றும் புரியாமல் பார்த்து விழித்தனர். அவர் படிக்கப் படிக்க அலுப்புத்தான் அதிகரித்தது. அந்த அலுப்பைப் பலமாகக் கொட்டாவி விட்டுத் தெரிவித்தனர்.

வக்கீல் ராகவனின் 'பொறுமை' யெல்லாம் தீர்ந்துவிட்டது இனி ஒரு கணமும் பொறுக்க முடியாது என்ற நிலைமை அடைந்து விட்டார். "இவருக்குத் திடீர் என்று பயித்தியம் பிடித்து விட்டதா?" என்றார்.

"இந்த வழக்குக்கும், இவர் இப்போது படிக்கும் விஷயங்களுக்கும் என்ன சம்பந்தம்?" என்றார் சர்க்கார் வக்கீல்.

இப்படி இவர்கள் இருவரும் பலத்த குரலில் பேசிக் கொள்ளவே, திரு. தாமோதரன் இந்தத் தடவை அவர்களைக் கவனிக்க வேண்டியதாகிவிட்டது.

"உங்கள் நடத்தையைக் கண்டு நான் சற்றும் வியப்படையவில்லை. எத்தனையோ தடவை எத்தனை பேர் பேர் என் கருத்துக்களைப் புரிந்து கொள்ளாமலிருந்திருக்கின்றனர். ஏன், விவசாய விசாரணைக் கமிஷன் அங்கத்தினர்களாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை என்றால் உங்களுக்கு எப்படிப் புரியப்போகிறது? மாதவனின் இளம் பருவத்து விளையாட்டுக்களில், விவசாயிகளின் பிரச்னைகளுக்குத் தகுந்த பரிகாரம் இருக்கிறது என்பதை உலகம் உணரவில்லையானால், பின்னர் என்னைக் குற்றம் சொல்லிப் பயனில்லை; அவரையும் குற்றம் சொல்லிப் பயனில்லை!" என்றார் தாமோதரன்.

திரு தாமோதரனின் இந்தக் கடும் எச்சரிக்கையைக் கேட்டுக் கோர்ட்டு முழுவதும் ஒரே நிச்சப்தத்தில் ஆழ்ந்தது. வக்கீல் ராகவன், "சரிதான், சரிதான். இந்த மனுஷன் மறுபடியும் தமது பாழாய்ப்போன விவசாய ஆராய்ச்சிக் கட்டுரையை இங்கே கொண்டு வந்து படிக்க ஆரம்பித்து விட்டார். அவ்வளவுதான் இன்றைக்கு நாம் தொலைந்தோம்!" என்றார்.

வாஸ்தவம்; வக்கீல் ராகவன் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை.

திருவாளர் தாமோதரன் தமது விவசாயக் கட்டுரை யொன்றைத்தான் வாசித்துக் கொண்டிருந்தார். அவருடைய துரதிர்ஷ்டத்தைப் பாருங்கள்! ஒரு தடவைதான் விவசாய விசாரணைக் குழுவினரிடம் வாசித்துப் பயித்தியம் என்ற பட்டம் பெற வேண்டிய துர்ப்பாக்கியம் நேர்ந்தது என்றால், இன்னொரு தடவையும் அதேமாதிரி அவரைப் பற்றி நினைக்கும் கும்பலுக்கே வாசித்துக் காட்டவேண்டியதாகப் போய்விட்டது!

ஆகவே, பக்கங்களைப் புரட்டிக் கொண்டே தீர்ப்பின் கடைசிப் பகுதிக்கு வந்தார். இந்தக் கடைசிப் பகுதியைக் கேட்கும் அவருடைய பரம விரோதியும், வழக்குக்கும் இதற்கும் நிச்சயமாகச் சம்பந்த மிருக்கிறது என்று ஒப்புக்கொள்வான். ஏனெனில் இப்பகுதியில்தான் திருவாளர் தாமோதரன் மாதவனைப் பிரமாதமாகப் பாராட்டி யிருந்தார். அவருடைய குற்றமற்ற தன்மையை விளக்கி யிருந்தார். மேலும் தமது பெயரையே கொண்ட சப் - இன்ஸ்பெக்டர், மாதவன் கங்காணி தமது வீட்டில் நடத்திய விருந்துபசாரத்துக்கு அழைக்கவில்லை என்பதற்காக க்ஷாத்திரம் கொண்டுதான் இவ்வளவும் செய்தார் என்றும் கூறி யிருந்தார். இவை யெல்லாவற்றையும்விட பெரிய விஷயம் இது தான்! எந்த வக்கீல்களும் கண்டு சொல்லாத விஷயத்தைக் கூறி யிருந்தார். அதாவது, மாதவன் போலீஸ்காரர்களிடமிருந்து தப்பியோட எவ்வித முயற்சியும் செய்யவில்லை; ஆனால் நரிகள் தாமாக வந்து அவரைத் தப்பியோடச் செய்தன. போலீஸ்காரர்களே, நரிகளிட மிருந்து அவரை மீட்கமுடியாதபோது, சிறுவனாக இருந்த அவர் என்ன செய்ய முடியும்?

"ஆகவே, நான் இந்தக் குற்றவாளியை விடுதலை செய்கிறேன். அவருக்குப் பெரிய அநீதி இழைக்கப்பட்டு விட்டது. விவசாயத் துறையில் அவர் பெரிய தொண்டு செய்திருக்கிறார் என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. அதற்கு உரிய பாராட்டுதலையும் புகழ்ச்சியும் அவர் பெறவேண்டிய இருக்க, நன்றி கெட்ட உலகமும், விஷமப் புத்தியுள்ள சப் - இன்ஸ்பெக்டரும் செய்திருப்பதை நீங்களே, பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று முடித்தார் திரு தாமோதரன்.

## 24. ஜோசியம் பலித்தது!

வழக்கிலிருந்து மாதவன் விடுபட்டு விட்டார். எனினும் அவர் மனச்சோர்வு இன்னும் தீரவில்லை. கைது செய்தவுடன் அவருக்கு ஏற்பட்ட பரபரப்பு, நண்பர்

கள் அளித்த ஒன்றுக்கு ஒன்று முரணான யோசனைகள், விசாரணையின்போது சாட்சிகள் தாம் மறக்க விரும்பிய நாட்களின் சம்பவங்களைப் பற்றியே கூறியவை, திரு தாமோதரன் அவர்களின் தீர்ப்பைப் பத்திரிகைகள் பிரமாதமாக விளம்பரப் படுத்தியது, ஆகிய எல்லா விஷயங்களும் சேர்ந்து அவர் உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் விரட்டியடித்து விட்டன.

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒருநாள் மாலை மாதவன் தமது மனைவியுடன் பங்களாத் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தார். மாதவி அவருடைய சோர்ந்த உள்ளத்துக்கு உற்சாகமூட்டும் வகையில் பேசிக் கொண்டிருந்தாள். அவளைப் பொறுத்த வரையில், மாதவன் நரிகளை மறந்திருக்கிறாரே என்பதில் எவ்வளவோ சந்தோஷம் அடைந்தாள்.

இவர்கள் இவ்விதம் பேசிக் கொண்டிருந்தபோது, பங்களா வாசற் கதவுகளின் மீது ஏறியும் இறங்கியும், திறந்தும் மூடியும் கிட்டு விளையாடிக் கொண்டிருந்தான். அடிக்கொருதரம், மாதவி அவன் மீது கவலை தோய்ந்த பார்வையைச் செலுத்தி வந்தாள். மாதவனுக்கு 'கேட்' கதவுகள் பாழாகப் போகின்றனவே என்று கோபம் வந்து கொண்டிருந்தது.

அந்தச் சமயம் ஒரு வேலைக்காரன் வந்தான். நம்ம "ஊருக்கு ரேகை பார்த்துச் சொல்லும் ஜோசியர் வந்திருக்கிறார். அவர் ரொம்பக் கெட்டிக்காரர் என்று சொல்லிக்கிறாங்க! நான்கூட 'எஜமான் உங்களைப் பார்க்க விரும்பலாம்' என்று சொல்லி வைத்திருக்கிறேன்; அழைத்து வரட்டுமா?" என்றான்.

"வேண்டாம்; அவர் இங்கே வரவேண்டியதில்லை" என்றார் மாதவன்.

ஆனால் மாதவிக்கு ஜோசியம் பார்க்க வேண்டுமென்ற ஆசையுண்டாயிற்று. ரேகை பார்த்துச் சொல்லுவதைப்பற்றியெல்லாம் எப்பொழுதோ கேள்விப் பட்டிருந்தாள். ஆகவே ஜோசியரை வரவழைக்கும்படி மாதவி வேண்டிக் கொண்டாள்.

வேலைக்காரன் போய் ரேகை சாஸ்திர நிபுணரை அழைத்து வந்தான்.

விசித்திர உடை தரித்த விசித்திர உருவம் ஒன்று வரும் என்று எதிர்பார்த்த மாதவியின் முன் ஒரு கிழவனை அழைத்து வந்து, 'இவர்தான் ஜோசியர்' என்று கூறியதும் அவளுக்கு ஏமாற்றமாகப் போய் விட்டது. எனினும் அந்தக் கிழவர் எதிர்காலத்தைப் பற்றிக் கூறித் தனது திறமையைக் காட்டிப் பிரமிக்க வைத்து விடுவார் என்று நினைத்தாள்.

மாதவன் "முதலில் அதோ இருக்கும், அந்த அயோக்கியப் பயலின் கையைப் பாருங்கள்! அவன் ரொம்பவும் தொந்தரவு கொடுக்கிறான்!" என்றார்.

கிட்டுவை அழைத்து வருவதற்குள், அந்த வேலைக்காரனுக்குப் போதும், போதும் என்றாகி விட்டது.

முதலில் ஜோசியர் கிட்டுவின் வலது கையைப் பார்த்தார். பிறகு இடது கையைப் பார்த்தார். இங்கொரு ரேகையைக் கவனித்துப் பார்த்தார். அங்கொரு ரேகையைக் கூர்ந்து பார்த்தார். பிறகு "இதே கையை நான் முப்பது வருஷங்களுக்கு முன் எப்போதோ பார்த்திருக்கிறேனே! ஒரு ரேகை கூட மாறவில்லை, அப்படியே இருக்கின்றனவே! சந்தேகமே இல்லை; இதே கைதான்" என்று ஒரே ஆச்சரியப் பட்டுக் கூறினார்.

"முட்டாள் தனமாகப் பேசாதீர்கள்! பையனுக்கு ஒன்பது வயதுகூட இன்னும் நிரம்பவில்லை, முப்பது வருஷங்களுக்கு முன் பார்த்ததாகப் பாசாங்கு செய்கிறீர்களே! இந்த மாதிரி கட்டுக் கதைகள் எல்லாம் யார் நம்புவார்கள்?" என்றார் மாதவன்.

ஜோசியர் தம்மை ரொம்பவும் அவமானப்படுத்தி விட்டதாக நினைத்தார். தமது பையிலிருந்து, உலகத்தில் உள்ள பெரிய மனிதர்கள் எல்லாம் கொடுத்த நற்சாட்சிப் பத்திரங்களின் கட்டை எடுத்துக் காண்பித்தார். மாதவன், "எங்கே இப்படிக் கொடுங்கள் பார்க்கலாம்" என்று கையை நீட்டினார். அப்பொழுது திடீர் என்று ஜோசியர் "இதோ இருக்கிறது" என்று இரைந்தார்.

மாதவனின் வலது கையைப் பிடித்துக் கூர்ந்து பார்த்துக் கொண்டே "நான் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அப்போதே சந்தேகப் பட்டேன். இந்தக் கையைத் தான் முப்பது வருஷங்களுக்கு முன் நான் பார்த்தது. நீ சுப்பனுடைய மகனல்லவா? நீ குழந்தையாக இருந்தாய். உன் கையைப் பார்த்து நீ ராஜா ஆவாய் என்று கூறினேன். இந்தப் பையனுக்குக் கூட அதையேதான் சொல்லுகிறேன். அவன் ஒரு நாள் ராஜா ஆவான். ஒரே மாதிரி ரேகைகள் இரண்டு தடவை வருதல், ரேகை சாஸ்திரத்தில் காணாத புதுமை! ஒரு அதிசயம்!" என்று கிழவர் உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

இவற்றையெல்லாம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த மாதவி, "வாஸ்தவம், ஜோசியர் சொல்வது உண்மை. அவன் ராஜா ஆவான் என்றால் மக்களின் ராஜா ஆவான் என்ற பொருளில் சொல்லவில்லை, நரிகளின் ராஜா ஆவான், நரிக் காட்டு ராஜா ஆவான் என்றுதான் சொல்லுகிறார்" என்றாள். (முற்றும்)

# வட்ட மேஜை

## ★ படிப்பா? பணமா?

ஆடி பிறக்கப் போகிறது. அதற்குள் கல்யாணங்கள் ஒருவாறு நடந்துவிட வேண்டுமென்று கல்யாணத் தரகர்கள் விரும்புவார்கள். பணமுள்ளோர் பணமுள்ள சம்பந்தத்தை விரும்புகிறார்கள். பெண் படித்திருக்க வேண்டும், வரதட்சிணையுடன் வர வேண்டும் என்பது அவர்கள் விருப்பம். பி. ஏ. படித்த மாப்பிள்ளைக்கு பி. ஏ. படித்த பெண்ணைப் பார்க்கிறார்கள். எஸ். எஸ். எல். ஸி. படித்த உபாத்தியாயர்களும் குமாஸ்தாக்களும் படித்த பெண்களை, அதாவது எஸ். எஸ். எல். ஸி. யும் ஹையர் கிரேடும் விரும்பினால் எள்ளி நகையாடுகிறார்கள்.

நான் ஒரு எஸ். எஸ். எல். ஸி. உபாத்தியாயினி. நான் பி. ஏ. படித்த மாப்பிள்ளையை எதிர்பார்த்திருந்தேன். ஆனால் முடிவில் எஸ். எஸ். எல். ஸி. உபாத்தியாயருக்கே மாலையிட்டேன். இருவரும் வேலை செய்து வருகிறோம். ஒரு குறைவுமின்றிப் பஞ்சப் பாட்டுப் பாடாமல் திருப்தியாகச் சாதாரண வாழ்க்கை இந்த ரேஷன் காலத்தில் நடத்துகிறோம். இருவரும் அறிவை விருத்தி செய்து கொள்ளுகிறோம்.

ஆனால் பி. ஏ., எம். ஏ., படித்தவர்கள் படித்த பெண்களை மணந்து அவர்களை வேலைக்கு அனுப்பினால் தங்களுக்குக் கௌரவக் குறைவு என்று வீட்டில் அறிவு மழுங்க வைத்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எட்டாவது ஒன்பதாவது படித்த பெண்களை மணந்து அவர்களுக்குத் தையல், சங்கீதம் போன்றவைகளைப் படிப்பித்து, தங்கள் வீட்டை அலங்கரித்துக் கொள்ளுவார்களாகில் அவர்களே தேச முன்னேற்றத்திற்குத் தொண்டு செய்தவர்களாவர்.

தரித்திரமே நம் நாடு முன்னேறாதிருப்பதற்குக் காரணம். இத்தரித்திரத்தை ஒழிக்க ஏழைக் குமாஸ்தாக்கள் படும்பாடு சொல்லி முடியாது. அவர்களின் மனைவிமார் அநேகர் படிப்பில்லாதவர்கள். ஒரு சில படித்தவர்கள் படித்த பெண்களை மணந்து இருவரும் சம்பாதித்து வீட்டில் பணத்தைக் குவித்துக் கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்து சுகமாக வாழ்கிறார்கள். இந்த ஒரு தன்னல எண்ணம் மாற வேண்டும். ஏழை உபாத்தியாயராலும் அவருக்குக் கண்டிப்பாக வேலை செய்யக்கூடிய மனைவியே தெரிந்தெடுக்கப் படவேண்டும். பணக்கார, படித்த மானேஜர் என்றால் அவர் சாதாரண படிப்புள்ள பெண்ணை மணந்து அவர்களை முன்னேற்றுவிக்க வேண்டும். இவ்வாறு நடக்குமாயின் நாம் நம் நாட்டில் ஏற்பட்டுள்ள இத் தரித்திரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போக்கி விடலாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மாயவரம்
7—7—50 எஸ். சி.

○●○

## விசித்திர அவமானம்

ஜூலை 9-ந் தேதி 'கல்கி' இதழில் வட்ட மேஜையில் 'தமிழ் மக்களுக்கு அவமானம்' என்ற தலைப்பின் கீழ் பம்பாய் அன்பர் ஸ்ரீ ஏ. பி. சாரதி எழுதிய கடிதத்தைப் படித்தேன்.

ஹிந்தி மெட்டுக்களைத் தமிழில் எடுப்பதால் தமிழர்களுக்கு அவமானம் என்பது விந்தையாக இருக்கிறது.

வடநாட்டில் வசிக்கும் தமிழர்கள் காது புளித்துப் போகும் அளவிற்கு ஹிந்திப் பாட்டுகளைக் கேட்பதால் ஒரு மாறுதலை வேண்டித் தமிழ்ப் படங்கள் அங்கு வரும் போது போய்ப் பார்ப்பது இயற்கை. அதே போல் ஹிந்தி தெரியாத பாமரத் தமிழர்கள் ஹிந்தி மெட்டுக்களை ஒரு மாறுதலுக்காக விரும்புவதும் இயற்கையே.

தற்போது வெளியிடப் பட்டுள்ள ஒரு உயர்தர ஆங்கிலப் படத்தில் கூட 'ஹிந்தி மெட்டி'ல் பாட்டு ஒன்று சேர்க்கப் பட்டிருக்கிறது. அதனால் அவர்கள் மானம் எங்கும் பறந்து விடவில்லை.

மலையாளத்து அவியலையும், ஆந்திர தேசத்துச் சட்டினியையும், வங்கத்து ரஸகுல்லாவையும் விரும்பி ரசிக்கும் தமிழன், ஹிந்தி மெட்டைக் கேட்பதையோ, பாடுவதையோ அவமானமாகக் கருதுவானேன்?

ஆங்கில நாகரிகம் முழுவதையும் விரும்பி ரசிக்கும் தமிழன், ஒரு சினிமாவில் நாலு பாட்டுக்களை ஹிந்தி மெட்டில் கேட்கவா அவமானப் படுகிறான்!

ஹிந்தியிலிருந்து தமிழில் 'டப்' செய்யவோ அல்லது தமிழிலிருந்து ஹிந்தியில் 'டப்' செய்யவோ ஹிந்தி-மெட்டு இன்றியமையாததாகும். ஹிந்தியில் 'டப்' செய்யப்பட்ட 'மீரா', 'சந்திரலேகா', 'அபூர்வ சகோதரர்கள்' முதலியவற்றின் தமிழ்ப் படங்கள் பெரும்பாலும் ஹிந்தி மெட்டுக்களுடன் கூடியதாகும். மேலும் தமிழர்களின் அபிமானத்தையும் அன்பையும் பெற்ற

படங்கள் அவை. தேசிய மொழியை அயல் மொழியாக எண்ண, ஒருவன் அவமானப்பட வேண்டாமா?

மரம் செடிகள் நடுவதற்கு வடநாட்டிலிருந்து தலைவர்களை இறக்குமதி செய்ய அவமானப்படாத தமிழன் ஹிந்தி மெட்டைப்பற்றி உடனே கவலைப்படத் தொடங்குவதை எந்த அவமானத்தில் சேர்ப்பது?

கல்கத்தா
9—7—50 வி. வி. ராமன்

○●○

## ★ இரத்தம் கொதிக்கிறது!

ஒரு உயிரைக் காப்பதற்கு என்ன தியாகம் வேண்டுமானுலும் செய்யலாம். அதற்காக இரத்த தானம் செய்வது (Donation of Blood for Transfusion) ஒரு மகத்தான தியாகம். ஆனுல் அப்படித் தானமாகப் பெற்ற இரத்தத்திற்கு வைத்திய நிபுணர்கள் இரத்தம் பெறும் நோயாளியின் தராதரத்தைச் சீர்தூக்கிப் பார்த்து அதிகமாகவோ குறைவாகவோ விலைபோட்டுப் பணம் வசூலிக்கும் வழக்கமிருக்கிறது என்பதைக் கேட்க மனம் குமுறுகிறது.

திருநெல்வேலியில் தற்சமயம் நடந்து கொண்டிருக்கும் பொருட்காட்சியில் நமது சென்னை சர்க்கார் ஜூலை 5-ந்தேதி வரை 24 நபர்களிடமிருந்து இரத்த தானம் பெற்றிருக்கிருர்கள். இத்தனை நபர்கள் முன்வந்தது அங்குள்ள டாக்டர்களுக்கே ஆச்சரியம் அளிக்கிறது. இது திருநெல்வேலி மக்களின் பண்பாட்டையும் சேவா உணர்ச்சியையும், தியாகத் தன்மையையும் காட்டுகிறது. வியக்கத்தக்க பெருந்தன்மையுடன் இரத்தத்தை ஈந்து, யாருடைய உயிரையேனும் ஈந்த இரத்தம் காப்பாற்றக்கூடும் என்ற சந்தோஷத்தினுல்தான். ஆனுல் அடைந்த சந்தோஷத்திற்கு உடனேயே பங்கம் ஏற்பட்டது. இந்த இரத்தத்தை வைத்திய விஞ்ஞான முறையில் சேகரித்து வைத்து இதைப் பெறும் நோயாளிகளிடமிருந்து அவரவர்கள் தகுதிக்குத் தகுந்தவாறு பணம் வசூலிக்கப்படுகிறது என்று கேள்விப்பட்டேன். இதை நினைக்கும் பொழுது, கொடுத்தவர்கள் இரத்தம் சற்றுக் கொதிக்கத்தானே செய்யும்?

இரத்தம் இம்மாதிரிச் சேகரிப்பதற்கும் — சில சமயம் நபர் ஒன்றுக்கு ரூ 5 வீதம் விலை கொடுக்கவும் வேண்டியிருக்கிறதாம். சேகரித்த இரத்தத்தைச் செப்பனிட்டு தாவாரியாகப் பிரித்து, விஞ்ஞான முறையில் சேமித்துக் காப்பாற்றி வைத்துக் கொள்ள எவ்வளவோ செலவு ஏற்படுகிறதென்பது உண்மை. பணச் செலவு மட்டுமன்றிக் கஷ்டங்களும் எவ்வளவோ? இவைகளை நான் அறியாமலில்லை. என்ன இருந்தபோதிலும் இரத்தம் வழங்குவதும், ஒருவர் இரத்தத்தை மற்றொருவரைக் காப்பாற்றுவதற்காக வாங்கி வைத்திடம் செய்வதும் தியாகம் பொருந்தியது. அதனுல் தெய்விக அம்சம் பொருந்தியது என்பது எனது துணிபு. மற்ற மருந்துகளை எளிதிலோ அல்லது மிகவும் சிரமப்பட்டு அதிகச் செலவிலோ தயார்செய்து விடுவதுபோல் இரத்தத்தை யாராலாவது உண்டாக்க முடிகிறதா? மனிதனுக்கு இரத்தம் மனிதனிடமிருந்தே பெற ஆகவேண்டியிருக்கிறது. கொடுப்பவனுக்கு நல்ல மனதும் உன்னதத் தன்மையும் இருந்தாலொழியச் சமயத்தில் பணத்தால் மட்டும் அதைப் பெற்றுவிட முடியாது. புனிதமான எண்ணத்துடன் கொடுத்த இரத்தத்தை விலைக்கு விற்பதா?

இரத்தம் வழங்கும் விஷயத்தில், தெய்விகம் பொருந்திய புனித சேவைக்குப் பணம் வசூலிப்பது மனிதப் பண்பிற்கே இழுக்கு என்று நான் நினைக்கிறேன். அரசாங்கத்தார் இதைப்பற்றிச் சற்று மனிதப் பண்புடனும் தயாள நோக்கத்துடனும் யோசித்துப் பார்த்தல் அவசியம். இலவச ஆரம்பக் கல்வி யளிப்பதுபோல், இரத்தத்தையும் இலவசமாகவே அளித்து உயிரளிப்பதும் அரசாங்கத்தின் கடமை யென்றால் மிகையில்லை. உயிரைப் பொறுத்தவரையில் ஏழையென்ன, பணக்காரனென்ன, 'கவர்ன்மெண்ட் ஸர்வெண்ட்'டாக இருந்தால் என்ன, கூலிக்கார



ஒருவர் :— தினமும் உங்கள் பையன் உங்கள் காரிலே போகிருனே நீங்கள் மட்டும் பஸ்ஸில் போகிறீர்களே?

பணக்காரர் :— ஆமாம், அவனுக்கு என்ன ஸார்! அவனுக்கு ஒரு பணக்கார அப்பா இருக்கிருர். ஆனுல் எனக்கு இல்லையே!

னானால் என்ன, யாரானால் என்ன? ஏன் வித்தியாசம் பார்க்க வேண்டும்? உயிர்-இரத்தம் பணத்திற்கு ஈடாகாது. ஈடாக்கினால் இரத்தம் கொதிக்காதா? மனம் குமுறாதா?

திருநெல்வேலி
8—7—50 கே. சீனிவாசன் எம். ஏ.

○●○

## பயங்கர நாடகங்கள்

நேற்று ராத்திரி, எட்டு மணியிலிருந்து ஒன்பது மணி வரை ஒரு நாடகம் சென்னை ரேடியோ நிலையத்தார் நடத்தப் போகிறார்கள் என்றும் புகழ் பெற்ற நடிகர்கள் நடிக்கிறார்கள் என்றும் போட்டிருந்தது.

என் கணவர் அன்று ஏதோ காரியமாக வெளியில் போய், திரும்பிவர வெகு நேரமாகும் என்று தெரிந்திருந்ததினால் அவர் வரும்வரை நல்ல பொழுது போக்காக இருக்குமே என்று எண்ணினேன். எட்டு மணிக்கு முன்பே, என் பையனுக்குச் சாதம் போட்டு, தூங்கப் பண்ணி, நாடகம் கேட்கத் தயாராக ரேடியோ அருகில் அமர்ந்தேன். முதலில் தொடங்கும்போதே சாட்டையால் அடிப்பது கேட்டது. போகப் போக நன்றாக இருக்கும் என்று நினைத்தேன். ஆனால், என்ன பயங்கரம்! கோர கபாலிகர்களின் குடலை எடுக்கும் சத்தங்களும், அட்டஹாஸங்களும் கேட்கத் தொடங்கின. எனக்கு ஒரே ஏமாற்றமாக இருந்தது. ஏன், கபாலிகரின் கோர சத்தம் கேட்டு எனக்கு ஒரே பயமாக இருந்தது. மேலே நாடகம் கேட்கப் பயம் இடம் தராததினால் உடனே ரேடியோவை அணைத்து விட்டேன். வீட்டில் யாருமில்லாமல், இந்த நாடகத்தைக் கேட்ட பிறகு ரொம்ப பயமாயிருந்ததினால், வீட்டில் உள்ள அத்தனை மின்சார விளக்குகளையும் போட்டுக்கொண்டு கணவர் வரும்வரை உட்கார்ந்திருந்தேன்.

தயவுசெய்து இந்தமாதிரி கோர நாடகங்களை ராத்திரி சமயம் ஒலிபரப்பாமலிருந்தால் ரொம்ப உபகாரமாயிருக்கும். எவ்வளவு புகழ்பெற்ற நடிகர்களானாலும் இம்மாதிரி நாடகங்கள் கேட்கப் பிடிக்கிறதில்லை. ரேடியோ நிலையத்தார் இதைக் கவனிப்பார்கள் என்று நம்புகிறேன்.

டாடாபுரம், கொச்சி
அன்னம் நாராயணன்

○●○

## ஹோட்டல் வாழ்க!

ஜூலை 9-ந் தேதி கல்கி பத்திரிகையில் "என்ன சேதி?" என்ற தலையங்கத்தில் தாங்கள் ஹோட்டல்களைப் பற்றி இந்த மாகாணத்திலுள்ள ஹோட்டல்காரர்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் சென்ற சில வருஷங்களாகக் குமுறிக் கொண்டிருக்கும் எண்ணத்தை அப்படியே படம் பிடித்த மாதிரி எழுதியிருக்கிறீர்கள். நாங்களும் ஒவ்வொரு ஊரிலிருந்தும் எவ்வளவோ மகஜர்களும், வேண்டுகோள்களும் சர்க்காருக்கு அனுப்பியிருந்தும் இவ்வளவு தெளிவாக எடுத்துக்காட்ட முடியவில்லை. இவ்வூரில் எங்கள் ஹோட்டல் 43 வருடங்களாக நடந்து வருகிறது. 1908-ல் ஸ்தாபித்தது. உண்மையில் தாங்கள் எழுதியிருப்பது போல், 'இவ்வளவு நாட்கள் நடத்தி விட்டோமே' என்றுதான் நடத்தி வருகிறேன். தங்கள் 'என்ன சேதி?' பொதுஜனங்களிடை ஓர் நல்லெண்ணத்தை ஏற்படுத்தியிருக்கிறது. சர்க்காரும் எங்கள் குறைகளைக் கவனிக்க வேண்டும்.

அருப்புக்கோட்டை
7—7—50 நாயர்

○●○

## காலேஜுகளில் பேரம்

மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதில் பல்கலைக் கழகங்களும் காலேஜுகளும் சில விசேஷமான முறைகளையும் விதிகளையும் கையாளுகின்றன. உதாரணமாகச் சில காலேஜுகளில் ஜூன் 20-ம் தேதியன்று போனால், எஸ். எஸ். எல். ஸி யில் 350 மார்க்குகளுக்குக் குறைந்தவர்களை இன்டர் மீடியட் ஸயன்ஸ் குரூப்புகளில் சேர்ப்பதில்லை என்று அதிகாரிகள் கூறுகிறார்கள். ஜூன் 30-ந் தேதியன்று அப்ளிகேஷன்கள் குறைவாகவே இருந்தால் 300 மார்க்குகள் போதும் என்கிறார்கள். ஜூலை 3-ம் தேதியன்று போனால்-270-260 மார்க்கு உள்ளவர்களைச் சேர்க்கின்றனர். ஜூலை 8, 9 தேதிகளில் 250 மார்க்குகள் போதும்.

ஜூன் 20-ம் தேதியன்று 350 மார்க்குகள் தேவை என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள் ஜூலை 8-ம் தேதியன்று 250 மார்க்குகள் போதும் என்று கூறுவது ஏன்? முதலிலேயே 250 மார்க்குகள் வரை கவனிக்கப்படும் என்று சொல்லியிருக்கலாம். அல்லது வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது போல் எப்போதுமே 350க்குக் குறைந்தவர்களைச் சேர்க்கக் கூடாது. இதனால் சில இடங்கள்—ஸயன்ஸ் பகுதிகளிலுந்தான்—காலியாக இருந்து விட்டால் ஒன்றும் முடி முழுகிப்போய் விடாது. காலேஜுகளும் பல்கலைக் கழகங்களும் இம்மாதிரிக் கொள்கைகளை நாளுக்கொருதரம் மாற்றி வரும்போது அங்கே கல்வி பயிலுகின்ற மாணவர்கள் நிலையற்ற உள்ளத்தினராய் இருப்பதோடு நாட்டிற்குத் தலைவலி ஏற்படுத்துகின்ற நிக்ரமான காரியங்களில் ஈடுபடுகிறார்கள் என்றால் அதில் என்ன விந்தை இருக்கிறது?

சிதம்பரம்
13—6—50 எஸ். திருநாவுக்கரசு

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ "படிப்பா! பணமா!" என்ற கடிதம் எழுதிய மாயவரம் ஸ்ரீமதி எல். ஸி.க்கும், "இரத்தம் கொதிக்குது!" என்ற கடிதம் எழுதிய திருநெல்வேலி ஸ்ரீ கே. சீனிவாசன் எம். ஏ.க்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

**நமது இலங்கைக் கடிதம் :**

# எட்டு லட்சம் பேரின் தலைவிதி!

*ரஜனி*

கொழும்பு, ஜூலை—11உ

இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்தின் இருபதாவது வருஷக்கூட்டம் சென்ற வாரம் நடைபெற்ற பொழுது அதன் தலைவர் ஜனாப் என். எச். மூஸாஜி, இந்தியர்களிடம் இலங்கை அரசாங்கம் கைக்கொண்டுள்ள முறைகளைக் கண்டித்துப் பேசினார். எட்டு லட்சம் இந்தியர்களுடைய தலைவிதியை இமிகிரேஷன் கன்ட்ரோலரின் கையில் ஒப்புவித்திருப்பது உலகில் வேறு எங்கும் கண்டிராத புதுமையென்றும் கூறினார். இலங்கை இந்தியர்களின் பிரச்னை முற்றி வருவதால், இலங்கை, இந்தியா, பாகிஸ்தான் ஆகிய மூன்று தேசப் பிரதிநிதிகளும் ஒரு வட்ட மேஜை மகாநாடு கூடிச் சமரச முடிவுகளைச் செய்வது அவசியமானதென்றும் அவர் வற்புறுத்தினார்.

வர்த்தகச் சங்கத்துக்குச் சென்ற ஐந்து வருஷ காலமாக கௌரவக் காரியதரிசியாய் சேவை செய்தவரும், இந்திய வர்த்தகர்களின் சார்பாக டில்லி, சென்னை அரசாங்கங்களிடம் பல முறை தூது சென்றவருமான ஸ்ரீ கே. ஜீ. ராவுக்குச் சங்கம் தனது பாராட்டுதலைத் தெரிவித்து ஒரு வெள்ளி "ஷீல்டு" வழங்கியது. அதை இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரி அவருக்கு அன்புடன் வழங்கினார். இந்திய வர்த்தகச் சங்கத்தின் செல்வாக்கும் கௌரவமும் வெகுவாக உயர்ந்ததற்கு ஸ்ரீ ராவ் அவர்களே மூலகாரணமென்று சங்கத் தலைவர் ஜனாப் மூஸாஜி தமது தலைமைப் பிரசங்கத்தில் சுட்டிக் காட்டியதைச் சபையினர் ஏக மனதாக ஆமோதித்தனர்.

## ஏழைகளுக்குப் பலனில்லை

இலங்கையின் வெளி தேசச் செலாவணி நிலைமை அபிவிருத்தி யடைந்திருப்பதால் கட்டுப்பாடுகளை ஓரளவு தளர்த்தி விட்டிருப்பதாகச் செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரி அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அந்த அறிக்கை வெறும் கண் துடைப்பு வித்தையாக இருக்கிறதேயன்றி, இந்தியாவில் அரைப் பட்டினி கிடக்கும் ஆயிரக்கணக்கான இலங்கை இந்தியர்களின் குடும்பங்களுக்குச் சிறிதளவு நிவாரணமும் அளிப்பதாயில்லை. இதற்கு மாறாக முதலாளிகளுக்கும் பெரிய சம்பளக்காரர்களுக்கும் புதிய சலுகைகளை அரசாங்கம் அளிக்க முன் வந்திருக்கிறது. பாடுபட்டு உழைத்த சம்பாத்தியத்தில் ஒரு சிறு பகுதியையும் தங்களது குடும்பங்களுக்கு அனுப்ப முடியாமல் அநேகர் கஷ்டப்படுகிறார்கள். மாதம் இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் அனுப்புவதற்குப் 'பர்மிட்' கேட்டால் இவ்வளவு காலமும் இருபத்தைந்து ரூபாயில் ஜீவித்த குடும்பம் இப்போது ஏன் அப்படிச் செய்ய முடியாதென்பதற்குச் சரியான காரணம் காட்டும்படி கேட்கிறார்கள். உண்மையில் நிவாரணமளிக்கப்படவேண்டியவர்கள் இந்த எளிய ஜனங்கள் தான். இவர்களை விட்டுப் பெரிய வருமானமுடையவர்கள் ரஜாவில் இந்தியாவுக்குப் போகும் பொழுது ஆயிரம் ரூபாய்க்குப் பதிலாக இனி ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்குப் 'பர்மிட்' வாங்கிப் போகலாம என்கிறது அரசாங்க அறிக்கை!

இலங்கையின் வெளிதேசச் செலாவணி நிலைமை இப்பொழுது அபிவிருத்தியடைந்திருப்பதால் இந்தியாவைப் போல இலங்கை அரசாங்கமும் எளிய ஜனங்கள் மாதந்தோறும் சுமார் ஐம்பது ரூபாய் வரையிலேனும் 'பர்மிட்' இல்லாமல் மணியார்டர் செய்ய அனுமதிப்பதுதான் அவர்களுக்கு உதவியாக இருக்கும்.

## பிரதமர் வீட்டில் 'மன்னர்'!

பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவின் பங்களாவில் ஒரு பெரிய தமாஷ் சமீபத்தில் நடந்தது. ஒரு நாள் விடியற்காலை பிரதமர் கண் விழித்துப் படுக்கையிலிருந்து எழுந்ததும் அவர் முன்னால் ஒரு மனிதர் கம்பீரமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்துப் போனார். "நான் இலங்கையின் ராஜாவாக வேண்டுமென்று சகல தேவதைகளும் என்னை ஆசீர்வதித்து அனுப்பியிருக்கின்றன. என்னை ராஜாவாக்கினால் ஆயுள் பரியந்தம் உங்களை எனது பிரதம மந்திரி

யாக வைத்திருப்பேன்" என்றார் வந்த மனிதர். பிரதமர் தமது வழக்கமான நிதானத்துடன் "ஆயுள் பரியந்தம் பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளுவதாகச் சட்டென்று பதில் கொடுத்து விடமுடியாது. இதைப் பற்றி யோசிக்கக் கொஞ்சம் அவகாசம் வேண்டும்" என்று கூறினார். விடிந்த நேரத்துக்கெல்லாம் இலங்கை 'மன்னரை'க் காவலாளிகள் அங்கிருந்து வெளியேற்றினார்கள். பிரதமர் வாசஸ்தலத்தில் கட்டுக் காவல்கள் அதி தீவிரமாயிருக்கும் பொழுது இலங்கை 'மன்னர்' அவ்வளவு காவலையும் மீறிக் கொண்டு பிரதமரின் படுக்கையறைக்குள் எப்படிப் பிரவேசித்தார் என்பது பெரிய மர்மமாயிருக்கிறது!

## கடன் பட்ட அதிகாரிகள்

இலங்கை அரசாங்க அதிகாரிகளுக்கிடையில் லஞ்சமும் ஊழலும் மலிந்திருக்கக் காரணம் அவர்கள் கழுத்து வரையில் கடன்களில் ஆழ்ந்திருப்பதுதான் என்று கூறப்பட்டதின் பேரில், இதைப்பற்றி விசாரணை நடத்த ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அந்தக் கமிட்டியினர் தங்களுடைய யாதாஸ்தில் பல ரசமான விபரங்களை வெளியிட்டிருக்கிறார்கள். மொத்தம் 1.34,900 அரசாங்க உத்தியோகஸ்தர்களில் 17,186 பேர்கள் ஒன்றரைக் கோடி ரூபாய் வரையில் கடன் பட்டிருக்கிறார்கள். இவர்களைத் தவிர கமிட்டியிடம் உண்மையைத் தெரிவிக்காதவர்கள் வேறு இருக்கிறார்கள். ஆடம்பர வாழ்க்கை காரணமாக வீண் செலவுகள் செய்வது, வீட்டு வாடகை அதிகரிப்பு, அடிக்கடி உத்தியோக மாற்றங்கள் முதலான பல காரணங்களினாலேயே அரசாங்க அதிகாரிகள் கடன்பட்டிருக்கிறார்களென்று கமிட்டி கூறுகிறது. சென்ற வாரம் சுமார் இருபத்தையாயிரத்துக்கு மேற்பட்ட அரசாங்க குமாஸ்தாக்களும் மற்றக் குமாஸ்தாக்களும் ஒரு பிரம்மாண்ட ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தி, தங்களுக்குக் கொடுக்கும் வாழ்க்கைச் செலவு அலவன்ஸை உடனே உயர்த்த வேண்டுமென்றும், ஆப்கன் லேவா தேவிக்காரர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்றும் மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள்.

## இலங்கையும் கோரியாவும்

இவ்வாரம் இலங்கையின் அயல்நாட்டுக் கொள்கையைப் பற்றி பார்லிமெண்டில் காரசாரமான விவாதம் நடைபெற்றது. இலங்கை காமன்வெல்த்திடமிருந்து முற்றிலும் விலகி குடியரசாகப் பிரகடனம் செய்ய வேண்டுமென்று எதிர்க் கட்சித் தலைவர் டாக்டர் என். எம். பெரைரா வற்புறுத்தினார். கொரியா யுத்தத்தில் அமெரிக்காவை இலங்கை ஆதரிக்கக் கூடாதென்பதே எதிர்க் கட்சியைச் சேர்ந்த எல்லோரும் வற்புறுத்திய பொதுவான கொள்கை. விவாதத்துக்குப் பிரதம மந்திரி பதிலளிக்கையில் கொரியா யுத்தம் அந்நாட்டு மக்களுடைய சொந்த விஷயமாகையால் அதில் இலங்கை தலையிடாதென்றார். அதே சமயம் இலங்கையின் சுதந்திரத்துக்கு ஆபத்து ஏற்படுவதாயிருப்பின் இலங்கை மக்கள் ஒரு கை பார்த்து விடுவார்களென்பதையும் உறுதியாகச் சொன்னார். பொதுவாக அமெரிக்காவின் ஜனநாயகக் கொள்கைகளை இலங்கை ஆதரிப்பதாயும் சோவியத் ரஷ்யாவின் கொள்கை உலக ஆதிக்க நோக்கமாக இருப்பதால் அதை இலங்கை ஆதரிக்காதென்றும் பிரதமர் தெரிவித்தார்.

## யாத்திரீகர்களுக்கு எச்சரிக்கை

இவ்வருடம் ஜூலை 15-ம் தேதி முதல் கதிர்காமத்தில் ஆடிவேல் உற்சவம் ஆரம்பமாகின்றது. இம்மாதக் கடைசிவரை ஆயிரக்கணக்கான சைவர்களும் பௌத்தர்களும் கதிர்காமத்துக்கு யாத்திரை போய் வருவார்கள். இதற்காக ஏற்கனவே தென்னிந்தியாவிலிருந்து நூற்றுக்கணக்கானவர்கள் இங்கு வந்திருக்கின்றனர். தினசரி தலைமன்னார் ரயிலில் மற்றும் அனேகர் வந்துகொண்டிருக்கிறார்கள். இவர்களுக்குக் கதிர்காமத்தில் முன்பு எப்பொழுதுமில்லாத ஒரு பெரிய கஷ்டம் காத்திருக்கிறது. அங்குள்ள மாணிக்க கங்கை கொடிய கோடையினால் வரண்டு போய்க் கிடக்கிறது. சென்ற பல ஆண்டுகளுக்கிடையில் மாணிக்க கங்கை ஆடிவேல் விழாவின்பொழுது ஜலமில்லாமல் இருந்ததில்லை. அங்கு ஒரு துளி ஜலம் கூடக் கிடையாதென்றும், யாத்திரீகர்கள் கையில் ஜலம் எடுத்துப் போக வேண்டுமென்றும், வரட்சியினால் தொத்து நோய்கள் பரவக்கூடுமென்றும் அரசாங்கம் எச்சரித்திருக்கிறது. கொழும்பில் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் பழைய, புதிய கதிரேசன் கோவில்களில் ஆடிவேல் உற்சவத்தை வழக்கம் போலச் சிறப்பாகக் கொண்டாட இவ்வருடமும் தகுந்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

# திரு அருள் மொழி

மூன்றும் பதிப்பு

விலை ரூ. 3-8-0

○●○

முதற் பாகம் - பக்தி ஸாரம்.

இரண்டாம் பாகம் - தேவார திருவாசகங்களிலிருந்தும் திவ்விய பிரபந்தங்களிலிருந்தும் ஐந்நூறு பாசுரங்கள் உரையுடன் கூடிய தொகுப்பு.

மூன்றும் பாகம் - சிவ ஸஹஸ்ர நாமமும், விஷ்ணு ஸஹஸ்ர நாமமும் - பாசுரங்களிலிருந்து தொகுக்கப் பட்டவை.

○●○

கவர்னர் ஜனரலா யிருந்த ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இப் புத்தகத்தைப் பற்றி எழுதியுள்ள புகழ்ச்சியுரை :

" இப்புத்தகத்தில், பக்திஸாரம் என்னும் அத்தியாயத்தைப் படித்து வருகிறேன். இவ்விஷயத்தைப் பற்றி இவ்வளவு தெளிவாகவும் பொருள் மிக்க முறையிலும், திறமையுடனும் எழுதப் பட்டுள்ள விளக்கத்தை நான் பார்த்ததில்லை. விஷயம் முதல்தரமாக இருப்பதுடன் தமிழ் நடையும் மிகச் சிறந்ததாக இருக்கிறது."

○●○

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் - சென்னை - 4

நறுமணத்திற்கெல்லாம்
அடிப்படையாயுள்ளது

# மைசூர் சந்தனத் தைலம்

கவர்ன்மெண்ட் சந்தண
ஆயில் பாக்டரி, மைசூர்

---




# போனோமிண்ட்

## பேதி மிட்டா யிக்கு ஜே!

திவ்வியமான பப்பர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

---

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி
99-A. அரமனைக்காரத் தெரு :: மதராஸ் - 1

WL 6



# உணவு



# மேலும் அதிக உணவு

நம் எல்லோருக்கும்

வேலை

கையிலிருக்கிறது

உணவு நெருக்கடியை எதிர்த்துப் போருக




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras




ALKI ஜூலை 23, 1950 4 அண

"கல்கி" ஆசிரியர் எழுதிய

இருபெரு நவீனங்கள்

•

# சிவகாமியின் சபதம்

பரிசுப் பதிப்பு ரூ. 15

•

# பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை இவ்விரு நவீனங்களும் அற்புதமாக விளக்குகின்றன

விலை ரூ. 6-8-0

•

சசிதேவி

எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபாற் செலவு தனி)

•

கிடைக்குமிடம்

## கல்கி காரியாலயம்

கீழ்ப்பாக்கம் - சென்னை




சந்தனாதித் தைலம்







அரைக்கீரைவிதை தைலம்

டி. எஸ். ஆர். தைலங்களை ஆயிரக்கணக்கான மக்கள் விரும்பி உபயோகிப்பதற்குக் காரணம் அவைகளின் சிறந்த குணமே. ஆயுர்வேத சாஸ்திரீய முறைப்படி தயாரித்த சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம் மூளைக்குக் குளிர்ச்சியையும் சருமத்திற்குப் பளபளப்பையும் கொடுக்கின்றன.



**டி. எஸ். ஆர் & கோ.**

**கும்பகோணம்**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:

கூராஜ் ஏஜன்ஸீஸ்

சைவிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:

B. பாலபட்டாபி செட்டியார்

346, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:

சேகர்ஸ், திருப்பத்தூர் (வட. ஆ.)